*விஜய நகர நிலக்கோட்டை வல்லாள கூளப்ப நாயக்கர் வீர வரலாறு*

ஆசிரியர் கு.ஜெகதீஸ்குமார்



ஆசிரியர் கு.ஜெகதீஸ்குமார்

*ஸ்ரீமத் புவன தஹன கைலாச ஈஸ்வரன் அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகன்,சர்வ ஜிவ தயாபாரன்,சர்வலோக நாயகன்,விஜய நகர் அதிபன்,நிலக்கோட்டை ராயன்,வல்லக்வார் குல மகாராஜாதிராஜன் ராஜாமாத்தாண்டன்,வேத வியசா பட்டையங்கார் சிஷ்யன் நிலக்கோட்டை ஜமீன்தார்,முதல் ஜில்லா போர்டு தலைவர் , வடக்கு ஜமீன்தார் அரண்மனை*

*S.காமய கூளப்ப நாயக்கர் போற்றி!*



பொருளடக்கம் தலைப்புகள்

## *1. முன்னுரை:*

*நிலக்கோட்டை வரலாறு எழுதும் நான் இந்த வரலாற்றுக்கு சொந்தக்காரன் ஆவேன்.என்னுடைய நீண்ட நாள் ஆசை என்னுடைய முன்னோர் வரலாறை கிடைக்கின்ற தரவுகளை கொண்டு எழுத வேண்டும்.இந்த வரலாற்று நூலை என் முன்னோர் உயர் திரு s.காமய கூளப்ப நாயக்கர் முதல் மற்றும் முன்னாள் நிலக்கோட்டைபேரூராட்சி தலைவர் அவர்களுக்கு சமர்ப்பிக்கின்றேன்.*

*நாயக்கர் வரலாறே விந்தையான ஒன்று.அயல் நாடுகளில் இத்தகைய வரலாறு நடந்து இருந்தால் தலையில் தூக்கி வைத்து கொண்டாடி இருப்பார்கள்.இந்தியா என்பது பரந்து விரிந்த நாடு என்பதாலும் அந்த நாட்டை ஆள வேண்டும், பிரித்து ஆண்டால் மிக எளிது என்பதாலும், இந்திய நாட்டின் மீது படையெடுத்த அந்நிய அரசுகள் இத்தகைய பிரித்தாளும் கொள்கையை பயன்படுத்தி வரலாறுகளை இருட்டடைப்பு செய்ததாலும் பல வரலாறுகள் இன்றும் இருண்ட காலமாகவே உள்ளன.ஆனால் நாயக்க ஆட்சி முறையில் அவ்வளவாக இருட்டடைப்பு செய்ய முடியவில்லை என்றாலும் வெள்ளைக்காரன் வரலாற்றை ஆராய்ச்சி செய்கிறேன் என்ற பேரில் போலியான கல்வெட்டுகளையும்,ஒரே பேரில் இருவர் இருந்தால் இருவரும் ஒருவரே என ஆராய்ச்சி முடிவு செய்ததாலும் சில அரசுகளின் ஆண்டு தொடக்கம் தவறாகவே பதியப்பட்டுள்ளன.அவர்களையும் குறை சொல்ல முடியாது.இருக்குற தரவுகளை வைத்து எழுதி சென்றுவிட்டனர்.*
**ஆரம்பகாலகட்ட சுல்த்தான்கள் இந்தியாவில் நுழைந்த போது அவர்கள் ராஜகம்பள ராஜாக்கள்வுடன் இணைவுடனே செயல்பட்டு இருக்கிறார்கள்..சுல்த்தான் நாணயங்களில் லட்சுமி தேவி போன்ற இந்து தெய்வங்களை தங்கள் நாணயங்களில் வெளியிட்டனர்.அவர்கள் நாடு பிடிக்கும் கொள்கைக்காக ராஜகம்பள ராஜாக்களிடம்(சிற்றரசர்கள்)பெண் கேட்டுள்ளனர்.ராஜகம்பள ராஜாக்கள் பூர்வீகம் முல்லை நில ராஜாக்கள்,மற்றும் இந்திர பிரதேசத்தை(அஸ்தினாபுரம்) ஆண்ட ராஜாக்களோடு தொடர்பு உடையவர்கள் ஆதலால் அதிர்ச்சிக்கு உள்ளாகி அவர்களிடம் சண்டையிட்டு உள்ளனர்.சில சுல்த்தான்கள் இந்துக்களின் மன உணர்வுகளை புரிந்து கொண்டு நல்லாட்சி செய்தனர்.ஆனால் நாடு பிடித்து**

**செல்வங்களை அடைய வேண்டும் என நினைத்த சில சுல்த்தான்கள் கொடூரமான முறையை கையாண்டு செல்வத்தில் மிதந்தனர்.**

*இன்றைய நிலக்கோட்டை அன்றைய திண்டுக்கல் மண்டலத்தில் பதினான்கம் நூற்றாண்டின் மத்தியில் வல்லக்கவார் ராஜ்ஜியத்தில் இருந்த ஒரு சமஸ்தானம் ஆகும்.இந்த வல்லக்வார்கள்(ராஜகம்பளம்) இந்த வல்லக்கவார்கள் வட திசை அம்பே விருப்பாட்சி சேர்ந்த பகுதிகளில் வாழ்ந்தபோது* ***BIJAPUR)****, சுல்த்தான்கள்(அலாவுதீன் கில்ஜி) ஆளுகைகக்கு உட்பட்டது..*

*பின்னர் வந்த முகமது பின் துக்ளக் துக்ளக் என்ற முரண்பாடுகளின் மொத்த உருவம் தெற்கு ராஜ்ஜியம் பிடிக்க ராஜகம்பள நாயக்கர்களிடம் சம்பந்தம் பண்ணினால் எளிது என்று பெண் கேட்க அவர்களிடம் சண்டையிட்டு கல்யாணபுரம்,ஆனைகுந்தி,கம்பிளி நாடுகளுக்குள் வந்தனர்.அவர்களை குலப் பெருமைகளை கேட்டறிந்த ஆனைகுந்தி ராயர் இவர்கள் யது குலத்தவர்களை ஆனைகுந்தியில் தற்காலிமாக கோட்டை போட்டு ஆள சொல்கிறார்.அதன் பின்னர் கோவில்,குளங்கள்,அணைகள் போன்றவை கட்ட இந்த ராஜகம்பள வல்லக்கவார்கள் பங்கு அளப்பறியது.அதற்காக ராயர் அவர் பூமியில் திண்டுக்கல் பூமியில் கோட்டை போட விருதுகளும்,முத்திரைகள் கொடுத்து யானைகள் குதிரைகளோடு மக்கள் கூட்டத்தோடு திண்டுக்கல் மலைகளில் குடியேறினர்.*

## 2.யட்சகானம்:

**பதிமூன்றாம் நூற்றாண்டில் இந்த யட்சகானம் என்ற இசை நாட்டியங்கள் மிகவும் பிரசித்தி பெற்று விளங்கின.பத்தொன்பதாம் நூற்றாண்டின் இந்திய சுதந்திர போராட்டம் என்பது பறங்கியர்களுக்கும்,இந்தியர்களுக்கும் நடந்தது.பதிமூன்றாம் நூற்றாண்டின் இந்திய சுதந்திர போராட்டம் என்பது இந்து மன்னர்களான நாயக்கர்களுக்கும்,முஸ்லீம் மன்னர்களான சுல்த்தான்களுக்கும் இடையே நடந்தது..பின்னர் தென்னிந்தியா நாடு ஒரு முந்நூறு நூற்றாண்டு காலம் விடுதலை பெற்று இருந்தது.அப்பொழுது நாயக்க மன்னர்கள் விடுதலை உணர்வை மக்களிடம் கொண்டு செலுத்த யட்சகானம் என்ற இசை நாட்டியங்கள் பயன்படுத்தபட்டன.யக்சகானம் மாலை நேரம் ஆரம்பிக்கபட்டு,இரவு முழுவதும் நடந்து காலையில் முடிக்கபடும்.பின்னர்**

**இந்து மன்னர்களுக்கும்,முஸ்லீம் மன்னர்களுக்கும் ஒன்றோடு ஒன்று நட்புறவு கொண்டு வெள்ளையர்களை எதிர்த்தது அது வேற கதை.**

## 3. குறிப்புகள்

**1.தொட்டிய(தாட்டிய) ராஜாக்கள்**

**1.1 கோபால வம்சம்**

**1.2 கம்பள குலம்**

**1.3யாதவ கோத்திரம்**

**2.இடம்**

**2.1 முல்லை**

**2.2 துவாரகை பட்டிணம்**

**2.3ஆயர்ப்பாடி பட்டிணம்**

**2.3 கிருஷ்ண மதுரை பட்டிணம்**

**2.4 விஜய நகர்(ஆனைகொண்டி)**

**2.5 தென் மதுரை**

**3.விருதுகள்**

**3.1 முல்லை நில விருதுகள்**

**3.11ஆயகுழல**

**3.12ஒத்தைக்கொம்பு**

**3.13வசங்கடறால்**

**3.14ஒற்றைக்கொம்பு**

**3.2ஆயர்ப்பாடி விருதுகள்**

**3.21கருட கொடி**

**3.22அனும கொடி**

**3.23 சந்தர வட்ட கொடை**

**3.24சுதர்சண சக்கரம்**

**3.3 விஜய நகர் ராயர் கொடுத்த விருதுகள்.**

**4.தொழில்**

**4.1முல்லை நிலம்**

**4.11 ஆநிரை மேய்த்தல்**

**4.12 ஏறு தழுவுதல்**

**4.2 ஆயர்பாடியில்**

**4.1 ஆநிரை மேய்த்தலும் பாலும் பால் சார்ந்த தொழில்**

**4.3கிருஷ்ண மதுரை**

**4.31போர்த்தொழில்**

**4.32 வேட்டை**

**4.4 விஜய நகரம்**

**4.41 போர்த்தொழில்**

**4.5 தென் மதுரை**

**4.51 போர்த்தொழில்**

## 4.ஒன்பது ராஜ கம்பளங்கள்;

**விஷ்ணு ,அவர் பிரம்மனை உருவாக்கினார்.**

**அவரிடத்தில் அத்திரி உருவானர்.**

**அவரிடத்தில் சந்திரன் உருவானார்**

**அவரிடத்தில் புதன் உருவானார்.**

**புதன் இடத்தில் புருரவன் உருவானார்.அவன் இடத்தில் ஆயு உருவானார்.**

**ஆயு இடத்தில் நகுஷன்.நகுஷன் இடத்தில் யயாதி உருவானார்**

**.அவர் இடத்தில் யது உருவானார்.**

**யது இடத்தில் ஒன்பது ராஜ கம்பளங்கள் உருவாகினர்.**

**இந்த ஒன்பது ராஜகம்பளங்களும் இந்தியா முழுவதும் ஆட்சி செய்தனர்.இதில் இந்திர பிரதேசம், துவாரகை,மதுரா போன்றவை ஆகும்.பின்னர் ஆரிய படையெடுப்பால் அவர்களின் ஆட்சி தென்னிந்தியாவுக்குள் சுருங்கியது.**

**1.கம்பளத்தில் வேட கம்பளம்.**

**2.கம்பளத்தில் தொட்டிய கம்பளம்.**

**3.கம்பளத்தில் வேகிளி கம்பளம்.**

**4.கம்பளத்தில் அனுப்ப கம்பளம்.**

**5.கம்பளத்தில் கொல்ல கம்பளம்.**

6. **கம்பளத்தில்** காப்பு கம்பளம்

மீதிக்கம்பளங்கள் அந்நியரோடு தொடர்பினாலும் மதமாற்றத்தாலும் கம்பள விதிமுறைகளை மீறியதாளும் கம்பள அந்தஸ்தை இழந்தது.

## 5.தொட்டிய கம்பளம்:

**தொட்டிய பழங்குடியினர் முதன் முதலில் விஷ்ணு வழிபாடு உடையவர்கள்.சிலர் தங்கள் முடியை** விஷ்ணுவழிபாட்டுக்கு இணங்க திருத்தினர்.**இன்னும் சிலர் தெற்கே வந்து நியோகி பிராமணர்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டனர். நல்ல உடல் ஆஜானு பாகுவான தோற்றம் கொண்வர்கள்.அவர்களுடைய திருமாலின் நாமத்தை (நடுவில் மெல்லிய கோடு) வைத்து எளிதில் அடையாளம் காணலாம்.**

**தொட்டிய நாயக்கர் இராஜகம்பள இனமக்கள் மதுரை நாயக்கர்**களாகவும்,மதுரை **படையிலும், பாளையக்காரர்கள் படையிலும் படைவீரர்களாக;ஆயுதம் வைத்து இருந்துவர்களாக இருந்தார்கள். ஆங்கில ஆட்சியில் விவசாய குடிமக்களாக மாற்றபட்டனர்.அவர்கள் வீரமானவர்கள் வேகமானவர்கள்..காளை ஓட்டம் போன்ற வீரமான விளையாட்டுகளில் முதன்மையானவர்கள்.தரிசு நிலங்களை விளை நிலமாக மாற்றுவதில் திறமையானவர்கள். அவர்கள் பிரமாணர்களை வைத்து எந்த சடங்களும் செய்வதில்லை.**

**அவர்கள் தங்கள் குலத்துக்குள் ஒரு குருவை (கோடாங்கிநாயக்கன்) வைத்து சடங்குகளை செய்கின்றனர்..திருமலை நாயக்கர் அவர் இரண்டு விதமான குருவை நியமித்து திருவிழா மற்றும் மற்ற சடங்குகளை நடத்துவார்.அவர்களுக்கு சேவல் சண்டை ;வேட்டை போன்றவை விருப்பமானவை.திருமணம்;இறப்பு;விதவை ;கட்டாயபடுத்தாத சதி போன்றவை இருந்ததாக ஆங்கிலேயன் ஆவணப்படுத்தி சென்றிருக்கிறான்.**

**அம்மிக்குழவி போல் எழுந்தருளிக்கும் எங்கள் பெருமாள் திம்மராய பெருமாள் நிலக்கோட்டை சிலுக்குவார்பட்டி கோவில் மேட்டில் எழுந்து எங்களுக்கு அருள்புரிந்து ஆசிர்வதிக்கிறார். இதன் வரலாறு அனைத்து தொட்டிய நாயக்கர்களுக்கும் பொருந்துகிறது.சுல்தான் ஒருமுறை பெண் கேட்டு வருகிறான் இராஜகம்பளத்து நாயக்கரிடம்.வல்லக்கவார் குலம் தன் இனமான மற்ற குலங்களை காப்பாற்ற நான் பெண் தருகிறேன் என்று சுல்தானிடம் சொல்லி தன் இனத்தை தப்பி போக வைத்து தானும் அன்று இரவு மணப்பெண்ணுக்கு பதிலாக ஒரு நாயை உட்கார வைத்து நேற்றைய தேவகிரியிலிருந்து (இன்றைக்கு ஏறக்குறைய மகராஷ்டிரா ) தெற்கே உள்ள கம்பள நாட்டிற்கு (ஆந்திரா)தப்பி வந்துவிடுகிறார்கள். அப்படி தேவகிரியில் ஓடிவரும் பொழுது கம்பளத்து பெண் கூடையில் அம்மிக்குழவிவி(திரண்ட உருண்டை கல்) இருந்ததன் காரணமாக தூக்கி ஓட முடியவில்லை.அதை தூக்கி போட்டுவிட்டு அந்த பெண் சிறிது தூரம் செல்லும் பொழுது மீண்டும் அந்தக்கூடைக்குள் வந்துவிடுகிறது மீண்டும் கீழே வீச,மீண்டும் மீண்டும் கூடைக்குள்ளே**

**வந்துவிடுகிறது.மெய்சிலிர்த்த அந்த பெண் அப்பொழுது தான் உணர்ந்தார்.நம்மை ஆளும் நம் குல தெய்வம் பெருமாள் தான் தங்களுக்கு துணையாக வருகிறார் அவர் தம்மோடு வந்து பல வெற்றிகளை கொடுக்கப்போகிறார் என்பது அப்பொழுதே கம்பளத்தாருக்கு தெரிந்துவிட்டது.**

**கம்பளத்தார்கள் என்றுமே பார்ப்பனர்களை தங்களுக்கு மேலாக நிர்மானித்தது இல்லை.தங்கள் சடங்குகளை குல பெரியவர்களை வைத்து தாங்களே செய்து கொள்கின்றனர்.கம்பளத்தாரின் பொம்மக்கா மல்லம்மா என்ற பெண் தெய்வங்கள் மிக பழங்காலத்தில் தங்களை தாங்களே நெருப்பில் இட்டு இறந்ததால் உருவானவர்கள்.வீரக்காரன் அல்லது வீரமாட்டி என்ற மணமகன் புலிக்கு எதிராக சண்டையிடும் போது இறந்து தெய்வமானவர்.இதைப்போல முத்தாலம்மா பட்டலம்மா ஜக்கம்மா போன்ற பெண் தெய்வங்கள் போருக்கு துணையாய் நின்றன..(வடக்கிலிருந்து தெற்கு வர துணை)தம்பிரான் என்ற ஆண் தெய்வமுமம் வணங்கபட்டு இருக்கிறது.** தொட்டிய,வேகிளி கம்பள வரலாறுகளை பாளையப்பட்டு வம்சாவழிகள் மூலம் தெரிந்து கொள்ளலாம்.தொட்டிய காளியம்மன்,அகரம் முத்தலம்மா,போன்ற கிராம தெய்வ வழிபாடு உடையவர்கள்.

## 6.கொல்லா பழங்குடிகள்-கொல்லா

**கொல்லா இனத்தின் வரலாறு மிக நீண்ட யுகங்களை கொண்டது.அவர்கள் இந்தியாவின் பூர்வீகக்குடி ஆரியரல்லாத ஆயர் குலத்தை சேர்ந்தவர்கள்.அவர்கள் இயற்கையை வழிபட்டு கொண்டு இருந்தனர்[மாடுகள்;விலங்கு ;சூரியன்;சந்திரன்;மரங்கள்].பின்னர் கிருஷ்ணன்[திருமால்] இவர்கள் குடியில் பிறந்ததால் [ஆயர்=கொல்லா] வைணவத்தை ஏற்றுக்கொண்டனர்.சிவனின் வாகனம் நந்தி[மாடு] என்பதால் வீர சைவத்தையும் ஏற்றுக்கொண்டனர்.அவர்கள் ஊரு கொல்லா(Uru golla=town golla) மற்றும் காடு கொல்லா (kadu golla=jungle gola) என அழைக்கபடுகிறார்கள்.அவர்கள் யாதவ குலம், கிருஷ்ண குலமாகும்.அவர்கள் கொல்லராஜுலு என்றும்**

**அழைக்கபடுகிறார்கள்.கௌடா பட்டத்தை பின்னால் சேர்த்து கொள்கிறார்கள்.கிளாரி கொல்லா(Kilari golla) நாயக்கர் என்ற உறுப்பை(Term) பயன்படுத்துகிறார்கள்.கோபாலா என்ற சமஸ்கிருத வார்த்தையிலிருந்து கோவாலா என்று மாறி கொல்லா என்று ஆனது.கவுலி(Gauli),கவுலிகா என்றும் அழைக்காபடுகிறார்கள்.**

**காவடி அமைத்து பால் பானைகளை தூக்கி சென்றதால் காவாடிகார்(Kavadigas) என்றும் அழைக்கபடுகிறார்கள்.கன்னடத்தில் துருவல(Turuvala) என்று அழைக்கபடுகிறார்கள்.துரு (பசு ),Vala => ஆண்பால் பின்னொட்டு. புராணத்தில் சுக்ராச்சாரியார் தேவயானி:பிரம்மன் வழிப் பெண்,யயாதி போன்றவர்களை குறிப்பிட்டு அந்த வழி வந்து கிருஷ்ணன் புராணத்தையும் சொல்கிறார்கள்.யாதவ குலத்தில் கிருஷ்ணன் பிறந்தார் என்கிறார்கள்.கலியுகத்தில் ராப்பலி(Repali)யில் இருந்தார்கள் எனவும் ஒரு ராஜ நரேந்திரா காலத்தில் அவர் நாட்டில் அவர்படையில் சேர்ந்து தெற்கு வந்தனர் என்றும்.பிறகு கோல்கொண்டா கோட்டை(The Fort of Diamond) கட்டி செல்வஞ் செழித்து தென்னிந்தியாவை ஆண்டனர் என்றும் விஜய நகர் செழித்து வளர கோல்கொண்டா செல்வம் உதவியது என்றும் ..பாமினி பீஜப்பூர் சுல்த்தான்கள் இந்த விஜயநகர் செல்வத்தை கண்டு பொறாமைபட்டனர் எனவும் சொல்லி இருக்கிறார்கள்.**

**கொல்லாக்கள் தேவகிரியில் ஆட்சி செய்து கொண்டு இருந்த போது அவர்களின் மற்றொரு கிளையினர் (about In the begining of 10th century) அவர்கள் கீழை சாளுக்கிய மன்னன் ராஜ நரேந்திரன் காலத்தில்(About in the middle of 10th century) அவர்கள் படைகளில் படை வீரர்களாக சேர்ந்து தமிழகம் வந்தனர்.ராஜ நரேந்திரன் தஞ்சை சோழ வம்சத்தோடு திருமண உறவு(தஞ்சை அரசரின் மகள் இவரின் மனைவி) வைத்து இருந்தார்.இவர்கள் வடுகர் என்று அழைக்கபடுவார்கள்.தமிழ்நாட்டுக்கு வடக்கே இருந்தலால் கன்னட தெலுங்கு மொழி பேசுவர்களை வடகர்கள் என்று பொதுப்பெயர் வைத்து அழைப்பது வழக்கம்.வடவர் அல்லது வடுகர் என்ற சொல் சங்க இலக்கியத்தில் கையாளப்பட்டுள்ளது.ராஜ நரேந்திரன் மகனே குலோத்துங்க சோழன் ஆவார்.இவர் தஞ்சை சோழ அரசராக தேர்ந்தெடுக்கபட்டார்.இந்த குலோத்துங்க சோழன்**

**வடக்கன்(வடுகன்) என்று அழைக்கபட்ட கீழை சாளுக்கிய அரசன் ஆவார்.இவரது ஆட்சியில் சோழநாடு,கன்னட நாடு,ஆந்திரநாடு வரை சோழப்பேரரசு எல்லைகள் இருந்தது.**

**ஏறக்குறயே கி.பி பத்தாம் நூற்றாண்டிலியே கொல்லா நாயக்கர்கள் தமிழ்நாட்டில் வந்து ஆட்சி செய்ய ஆரம்பித்து விட்டனர்.பிறகு ஹொய்சாள பேரரசில் தண்ட நாயக்கர் என்ற பெயரில் தமிழ்நாட்டை ஆட்சி செய்தனர்.பிறகு விஜய நகர பேரரசில் மதுரை மகாணத்தை நாயக்க பேரரசு ஆண்டது.விஜய நகர்,பீஜநகர்(பெஞ்சை நகர்),ஆனைகுந்தி,(அரசு ஆவணத்தின் படி சில குறிப்புகள்)கடைசியாக அமைந்த இந்து சாம்ராஜ்ஜியம் விஜய நகர பேரரசு.இந்த அரசு இரண்டாயிரத்து ஐந்நூறு வருடங்கள் பழைமையான கிஸ்கிந்தாவிற்கு(அனுமார் வாழ்ந்த இடம்)இடத்திற்கு கூட்டி செல்கிறது. இந்த விஜய நகர பேரரசுக்கும் மகாபாரத்திற்குமஇராமயணத்திற்கும் தொடர்பு இருக்கத்தான் செய்கிறது. முகமதியர் வரலாற்று ஆசிரியர்கள் பீஜநகர் என்றும், பிரான்ஸ் வரலாற்று ஆசிரியர்கள் பிஸ்நகர் என்றும் பொதுவாக ஆனைகுந்தி என்றும் அழைக்கடுகிறது.யவணர்கள் தலைநகரம் ஆனைகுந்திக்கு அருகில் இருந்தால் அவர்கள் குறிப்பிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது.ஆனைகுந்தியின் கன்னட பெயர் Elephant pit. சமஸ்கிருத்தில் அஸ்தினாபுரம் என்று அர்த்தம் வருகிறது.அது மகாபாரத புராணத்தில் வரும் பாண்டவர்களின் தலைநகரம் ஆகும்.பீஜநகர்(விஜயநகர்) துங்கபத்திர நதியின் தென்கரையிலும் அதனுடைய புறநகர் ஆனைகுந்தி வடகரையிலும் காணமுடிகிறது.இன்றும் நிறைய இடிபாடுகளுடன் நகரங்கள் உள்ளது.நாம் ஏற்கனவே யாதவபேரரசு மற்றும் ஹொய்சாள பேரராரசு என்ற பங்காளி பேரரசுகள் சந்திர வம்சத்தால் ஆளப்பட்டது என பார்த்தோம்.இந்த இரண்டும் முகமதியரால் அழிக்கபட்டு யாதவ பேரரசின் கடைசி அரசன் மகன் சங்கமன் முகமதியரால் கொல்லப்பட்டும்.சங்கமனின் மகன்கள் ஹரிகர புக்க ராயர்கள் ஹொய்சாள பேரரசு மூன்றாம் வல்லாளன் ஆதரிக்கபட்டு மூன்றாம்**

**வல்லாளன் இறந்தவுடன் தாங்கள் ஆண்ட (பெஞ்ச=பெஞ்சை)விஜய நகரை(1336) பேரரசாக்கி*னர்.***

## *7.கம்பள வல்லக்கவார்:-*

*இன்றைய உத்திர பிரதேசத்திலிருந்து தேவகிரி வரை மாநிலத்தில் முஸ்லீம் ராஜாக்கள் படையெடுத்து பிடித்தபோது அங்கு ஒவ்வொரு தேசத்தையும் குறிப்பிட்ட பிரிவினர் ஆட்சி செய்து கொண்டனர்.அதில் கம்பள நாடும் ஒன்றாகும்.அந்த நாட்டுடன் திருமண உறவு கொண்டால் நாட்டை எளிதில் நாட்டையும் பிடித்து இந்தியாவையும் பிடித்துவிடலாம் என்று எண்ணி முஸ்லீம் ராஜாக்கள் வல்லக்கவார் குலத்தில் பெண் கேட்டனர்.*

*கம்பள ராஜாக்கள் வீரத்துடன் சண்டையிட்டும் தாக்கு பிடிக்க முடியாமல் வீழ்ந்தனர்.கம்பள ஸ்ரீகள் முஸ்லீம் ஆட்சியாளர்களிடம் பிடிபடாமல் தங்களத்தானே தீயிட்டு மாண்டனர்.பின்னர் இரவோடு இரவாக யமுனையை கடக்க நினைத்த போது தீராத மழையால் யமுனையில் திடீர் வெள்ளப் பெருக்கு உண்டானது.மழை பெய்ததால் அக்கரையில் இருந்த மரங்கள் இக்கரைக்கு வளைந்து கொடுக்க அந்த மரங்களை பாலம் போல கருதி கம்பள நாட்டில் இருந்த அனைத்து மக்களும், ஆடுமாடுகள்,அனைவரும் ஆனைகுந்தி நகருக்கு வந்து சேர்ந்தனர்.*

*இந்த கம்பள மக்கள் குடியேறியதால் என்னவோ இந்த நாடு கம்பளி நாடு என்றும் அதன் தலைநகர் ஆனைகுந்தி என்று அழைக்கபட்டதோ!என்னவோ! அங்கிருந்த ஆனைகுந்தி ராயர்(ஹொய்சாள ராயர்) கம்பள மக்களையும்,அவர்கள் ராஜாக்கள் பராக்கிரமங்களையும் வியப்படைந்து! முஸ்லீம் ஆட்சியாளர்களுக்கு எதிராக கம்பள வீரர்களை பயன்படுத்தி விஜய நகருக்கு அடித்தளம் போட்டுக்கொண்டனர்.*

*திடீரென்று விஜய நகர சமஸ்தானத்தை கம்பள மக்களக்காக அமைத்துக் கொடுத்த மூன்றாம் வல்லாளன் இறக்கவே ..விஜய நகர் சமஸ்தானம் மிகப்பெரிய சாம்ராஜ்ஜியமாக ஹொய்சாள பேரரசையும் விழுங்கி வளர்ந்தது.கம்பள பாளையக்காரர்கள் ஒவ்வொருவரும் ,தன் விஜய நகர நாட்டில் இருந்த காடுகளை அழித்து விவசாய நிலமாக்கி காலம்*

*காலமாக கிஸ்தி இன்றி ஆட்சி செய்ய அனுப்பபட்டனர்.அப்படி இருந்த மலைதான் பன்றி மலை(பழனி மலை)*

*வல்லக்கவார்களின கோட்டையாகும்.இந்த மலையை சுற்றி பல வல்லக்கவார் ராஜ்ஜியங்கள் உருவாகின.பாண்டியனுக்கும், சோழராஜாவுக்கும்(ஈழ) நடந்த சண்டையில் பாண்டியன் தோற்க தன்னுடைய பேரரசை காப்பாற்ற விஜய நகரம் சென்று ஒரு வருடம் காத்திருந்து விஜய நகர அதிபதியை கண்டு நடந்ததை சொல்ல ஈழ ராஜவை வெல்ல நாகம நாயக்கரை அனுப்பினர்.அப்பொழுது நாகம நாயக்கருக்கு பல உதவிகளை செய்து ஈழ ராஜவை பின்னோட செய்தவர்கள் வல்லக்கவார்கள்.அதனால் வல்லக்கவார்களுக்கு அவர் நாகம நாயக்கர் கொடுத்த வெகுமதி ஏரளாம்.*

## 8. மாக்கிய நாயக்கர்

சந்திர வம்சத்தில் யது மகாராஜா தோன்றினார்கள்.அந்த யது மகராஜா வம்சத்தில் ஒன்பது கம்பள ராஜாக்கள் உதித்தார்கள்.

அந்த ஒன்பது கம்பளத்தில் வல்லக்கவார் வம்சமும் ஒன்று.

வல்லக்கவார் வம்சத்தில் நூற்றி ஒன்று ராஜாக்கள் தோன்றினார்கள்.

அந்த நூற்றி ஒன்றில் விஜய நகர மாக்கிய நாயக்கர் உதித்தார்.இந்த மாக்கிய நாயக்கர் விஜய நகருக்காக பல வெற்றிகளை தேடி தந்தவர்.அதிலும் குறிப்பாக மதுரை சுல்த்தானியத்தை எதிர்த்து விஜய நகர மன்னன் புக்கரின் மகன் குமார கம்பணன் தலைமையில் நடைபெற்ற போரில் படைத்தளபதி வல்லாள மாக்கிய நாயக்கரின் வீரம் சற்று ஒருபடி உயரம் தான்.இந்த படையின் தலைமை படைத்தளபதி சாளுவ மங்கும் ஒரு வல்லக்கவார் தான்.விஜய நகரை கைப்பற்றிய இராண்டாவது சாளுவ வம்சத்தை தோற்றுவித்த யாராலும் வெல்ல முடியாத நரசிம்ம தேவராயரும் வல்லக்கவார் வம்சம் தான்.

*சிவப்புக்கச்சை*:

முகமதியர் படையெடுக்க போகிறார் என தெரிந்ததும் ராயர் அவர்கள் கம்பள ராஜாக்களை ஒவ்வொருவராக அழைத்தார்போருக்கு போக வேண்டும் தங்கள் உதவி எங்களுக்கு வேண்டும் என்று அரசவைக்கு அழைத்தார்.அதில் வல்லக்கவார் குல அரசர்களை இளவரசர்களை இவ்வாறு அழைத்தார்.பெண்ணாசை இல்லாதவர்கள்,முன்னுக்கு நடக்கபட்டவர்கள்(நேர்மையாளர்கள்) அவர்கள் போர்க்களத்திற்கு போக வேண்டும்.வைத்த காலை பின்வாங்க கூடாது.குதிரையில் இருந்து இறங்கினால் வெற்றியோடு,இல்லை பிணமாக இறங்க வேண்டும்.தாம்பூலம் வாங்கி உறுதிபடுத்துங்கள் என்றார்.

சிவப்பு கச்சைகளை எடுத்து கொள்ளுங்கள் என்றார்.யார் போர்புரிகிறார்கள் என தெரிந்து கொள்ள,எந்த வீரர்கள்,இளவரசர்கள் போரில் மடிந்து உள்ளார்கள் என தெரிந்து கொள்ள கச்சையை இடுப்பில் கட்டுவது வழக்கம்.அதில் இடுப்பில் சிவப்பு கச்சை கட்டி இருந்தால் வல்லக்கவார் குலம் ஆகும்.போரில் சுல்த்தானியத்தை வென்ற மாக்கிய நாயக்கருக்கு பல பரிசுகள் கொடுக்கபட்டன. வல்லக்கவார்கள் பெருமாளை இஷ்ட தெய்வமாகவும்,லகு அம்மனை குல தெய்வமாகவும் வழிபடுகின்றனர்.

அந்த மாக்கிய நாயக்காரின் வம்சத்தில்

நிலக்கோட்டை பாளைய மகாராஜா-கூளப்ப நாயக்கர்.

2)அம்மையநாயக்கனூர் பாளைய மகாராஜா-அம்மையப்ப நாயக்கர்.

3)விருப்பாட்சி பாளைய மகாராஜா-சின்னப்ப நாயக்கர்.

4)கன்னிவாடி பாளைய மகாராஜா-அப்பைய நாயக்கர்.

5)தொட்டியான் கோட்டை பாளைய மகாராஜா-பொம்மண்ண நாயக்கர்.

6)இடைய கோட்டை பாளைய மகாராஜா-எற்றகுடி திம்மைய நாயக்கர்.

7)பல்லியப்ப நாயக்கனூர் மகாராஜா-லக்கம நாயக்கர்.

**8 )**எர்றசை நாயக்கனூர் மகாராஜா.

**9.** மாம்பாறை பாளைய மகாராஜா.

போன்ற மகாராஜாக்கள் உதித்தார்கள்.மேற்கண்ட திண்டுக்கல்லை சுற்றை எல்லைகள் பிரித்துக்கொண்டு காடுகளை அழித்து ஊர்களை உருவாக்கி கொண்டு ஆண்டு வந்தார்கள்.

விஜய நகர ராயர் மாக்கிய நாயக்கருக்கு விஜய நகர ராயரால் கொடுக்கபட்ட கௌரவ பட்டங்கள்,பரிசுகள் கீழே வருவன:

1)பகல்தீவட்டி:- கூளப்ப நாயக்கர் விழாக்களில் பங்கேற்க்கும் போது,கூளப்ப நாயக்கரை சந்திக்க வரும்போது பகல் வேளையாக இருந்தாலும் தீப்பந்தங்களை ஏந்தி வருவர்.

2)வெண் சாமரம்:-இராசசின்னமாகக் கொள்ளப்படும் கவரிமானின் மயிர்க்கற்றையினால் செய்யப்பட்ட விசிறி.

3)சிங்கலாடத்துடத்துடனே கூடிய கனக பல்லாக்கு:-ராஜா சென்று வர.

4)மும்முரசு:- அறிவிப்பபை வெளிப்படுத்த.

5)சாமத்துறோக வெண்டயம்:- வலது காலில் போடுவது.

6)நிகளம் சங்கிலி:-வலது காலிலே போடுகிறது.

7)ஒண்டிரேகு துறாயி:- தலையில் அணிவது.

8)வீரகாண்டாமணி:- கழுத்திலே அணிவது.

9)வெண்கலப்பேறியுடன் ஒட்டகம்:-.போரில் பயன்படுத்துவது.

10)சிங்க,கரடி,புலித்தோல் முகப்பட்டா:- .போரின் போது பயன்படுத்துவது

11)வெள்ளைக்கொடி.

12)வெள்ளை சுருட்டி.

13)வெள்ளாடல்.

14)பச்சைக்கொடை.

15)பச்சை சுருட்டி.

16)கருடாடல்.

17)வெள்ளாடல்(பகறடால்).

18)ரணசிங்க பாசிகம்.

19)கலிகி துறாயி உடன் வெள்ளைக்குதிரை.

20)சிங்க கொடி.

21)வராக கொடி.

22)வீரத்தண்டை.

23)அம்பாரியுடன் யானை.

24)முன் பின் செல்லும் மணி.

25)அன்னக்கொடி.

**ஒன்பது கம்பளத்தில் தொட்டி கம்பளத்தில் பல்லாள(வல்லாள) தேவன் தோன்றினான்.அவன் கால் வழியில் சாளுவ மங்கு,சாளுவ நரசிம்மன் தோன்றினான்.அந்த வழியில் திண்டுக்கல் வராககிரி மலையை சுற்றி வல்லக்கவார்கள் கோட்டைகள் போட்டு ஆட்சி செய்தனர்.இந்த வல்லக்கவார் கோட்டைகளில் நிலக்கோட்டையும் ஒன்று.***திருமலை நாயக்கருக்கு தத்து புத்திரன் போல இருந்து மதுரையை பல போர்களில் காப்பாற்றிய கன்னிவாடி நாயக்கரும் வல்லக்கன் தானே.திருமலை நாயக்கருக்கு பெண் கொடுத்த நிலக்கோட்டை கூளப்ப நாயக்கரும் வல்லக்கவார் தானே.*

*முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கர் இரண்டாம் படைத்தளபதியாய் இருந்து இலங்கைப்போர்,பரமக்குடி போருக்கு உதவியவர் நிலக்கோட்டை கூளப்ப நாயக்கர் வல்லக்கவார் தானே! உலகப் புகழ் பெற்ற மற்றும் ஆங்கிலேயருக்கு சிம்ம சொப்பனமாக விளங்கிய விருப்பாட்சி கோபால் நாயக்கரும் வல்லக்கவார் தானே!*

### 9. ஹொய்சாள கோட்பாடு:-

ஹொய்சாள பேரரசில் மூன்றாம் வல்லாள தேவனுக்கு மிகவும் நெருங்கிய உறவினன்வல்லக்கவார் மாக்கிய நாயக்கரின் முன்னோர்.தன் மகனுக்காக பெஞ்சை (பீஜ=விஜய)நகரை நிறுவி காப்பாளராக மாக்கிய நாயக்கரின் முன்னோரை நியமிக்கின்றான் மூன்றாம் வல்லாளன்.இந்த வல்லக்கனுக்கு வாணன் என்ற மகன் இருக்கிறான்.இந்த ஹொய்சாள பேரரசில் சங்கம புதல்வர்களான ஹரிகர-புக்கரர் சமஸ்தானம் ஆண்டவர்கள்.இந்த சங்கம புதல்வர்களின் முக்கிய பணி பீஜப்பூர் சுல்த்தானை தெற்கே வரவிடமால் தடுப்பது.ஹொய்சாள பேரரசர் கண்ணனூர் என்ற சமயபுரத்தை தலைநகராக கொண்டு ஆண்டு மதுரை சுல்த்தானியத்தின் மீது போர் தொடுத்தார்.

இவ்வாறு தென்னிந்திய புரட்சியில் ஹொய்சாள பேரரசின் மூன்றாம் வல்லாள தேவன் கொல்லப்படுகிறார்.பின்னர் நான்காம் விஜய வல்லாளனுக்கு காப்பாளராக இருந்த வல்லக்கன் ஹரிகரனுக்கு மருமகனாகிறான். ஹொய்சாளரும் -விஜய நகர சங்கம

புதல்வர்கள் தென்னிந்திய புரட்சிக்கு புதிய தலைமை வகித்தனர்.பல்லப்ப தண்டநாயக்கர் என்பவர் தாட்டி(தாட்டியர்) சிங்க தண்ட நாயக்கர் என்பவரின் தம்பி ஆவார் மற்றும் வீர பல்லாள தேவனின் மகன் ஆவார். பல்லப்ப நாயக்கரின் மகன் வாணன் ஆவார்.பல்லாள தேவனின் அமைச்சரின் மருமகன் மாக்கிய நாயக்கர் ஆவார்.மேற்கண்ட குறிப்புகளில் இருந்துபல்லக்கவாணன் பெயரை தொடர்புபடடுத்துவதாக உள்ளது.மேலும் நிலக்கோட்டை வல்லாள கூளப்ப நாயக்கர் முன்னோர் மாக்கிய நாயக்கர் என்பதும் அவர் பெனு கொண்டாவை ஆண்டார் என்பதும் தெரிந்ததே. **மூன்றாம் வல்லாளன் கீழ் மாக்கிய(மாச்சிய) தண்ட நாயக்கர் அவர் பெனு கொண்டாவை ஆண்டு வந்தார்.அவர் வல்லாளனின் நெருங்கிய உறவினன் ஆவான் முரண்பாடுகளின் மொத்த உருவம் முகம்மது பின் துக்ளக் படையெடுப்பின் போது பெனுகொண்டாவை தக்க வைத்து கொண்டார் அவர்.பெனு கொண்டாவின் கடைசி ஆளுளுநர் புக்கா ஆவார்.அவர் விஜய நகரத்தை தோற்றுவித்தவர்களில் ஒருவர்.அவரின் சகோதரர் ஹரிகரர் தெற்கு மராட்டிய நாட்டை ஆண்டார் ஹாய்சாலர்களின் கீழ் ஆண்டார்.பெனுகொண்டா நிலக்கோட்டை மாக்கிய நாயக்கரின் கீழ் இருந்து பின் புக்காவிற்கு மாறியுள்ளது.துங்கபத்திரா நதிக்கரையில் அமைந்த ஹம்பி விருப்பாக்சி கடவுளின் புனித இடமாகும்.அது பல நூற்றாண்டுகளாக அவ்வாறு உள்ளது.ஆனைகுந்தி கம்பளி கோட்டைக்கு எதிராக அமைந்து.கம்பளி கோட்டையின் அழிவு விஜய நகருக்கு வித்திட்டது.ஹொய்சாள பேரரசின் மதுரை சுல்த்தானுக்கு எதிரான போர்த் தோல்வி பெனு கொண்டா சிறப்பை குறைத்தது.பின்னர் சாளுவ வம்ச நரசிங்க ராயரால் பெனுகொண்டாவின் பெயர் நிலை நிறுத்தப்பட்டது.பறவைகள் தான் காலநிலைக்கு ஏற்றவாறு வலசை(ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு) போகும்.இந்த ராஜகம்பள ராஜாக்கள் தன் மக்களுடன், சுல்த்தான்களால், மலைகள் தாண்டி ஆறுகள் தாண்டி வலசை இறங்கினார்கள்.**

**.இந்த முரட்டு துருக்கியர்களை எப்படித்தான் சமாளித்தனோரா? வட இந்தியாவை விட தென்னிந்தாயவில் அவர்களின் தாக்கம் கொஞ்சம் கட்டுக்குள்ளுதான் இருந்தது இருக்கிறது.இதற்கு தலைமை ஏற்றவன் மூன்றாம் வல்லாளன்.துணை நின்றவர்கள் சங்கமனின் ஐந்து வாரிசுகளின் கீழ்பணிபுரிந்த எழுபதுக்கும் மேற்பட்ட பாளையக்காரர்கள்.மற்றும்காமைய, புரோலைய,கிருஷ்ணப்ப நாயக்கர்.காம்பலித் தேவன்,வீரவல்லாளின் உயிர் இழப்புகள் வீண் போகாமல் விஜய நகரம் வளர்ந்து வந்து காத்து நின்றது தென்னிந்தியாவை.**

## 10.காம்பிலித்தேவன்:

**யாதவ பேரரசின் கீழ் இருந்த சிற்றசன்..யாதவ பேரரசு வீழ்ச்சி அடைந்தபோது காம்பிலித்தேவன் தன்னரசாக மாற்றிக்கொண்டான் என தெரிகிறது.இருமுறை சுல்த்தான்களை வென்றான்.சாளுக்கியர்கள் இருந்த கோட்டை காம்பிலித்தேவன் கோட்டைகட்டிய இடம்.மூன்றாம் முறை சுல்த்தான்களுடன் போரிட்டு வீர மரணம் அடைந்தான்.**

## 11.மூன்றாம் வல்லாளன்:

**பலமுறை சுல்த்தான் படையெடுப்பில் சிக்கினாலும் தன் சாதுர்த்தியால் சமாளித்தான்.காம்பலித்தேவனால் அனுப்பட்ட முஸ்லீம் ஆளுநரை காப்பாற்ற நினைத்து பேரரழிவில் சிக்கினான்.புரட்சி இயக்கம் உருவாக்கினான் தென்னிந்தியாவில் சுல்த்தான் ஆட்சியை அகற்ற.காம்பிலையை கைப்பற்றினான்.சங்கமனின் ஐந்து வாரிசுகைளுக்கு நகரங்கள் கொடுத்து புரட்சி கூட்டணியை வலுப்பைடுத்தினான்..இறுதியில் கொலையுண்டு இறந்தான்.அவன் ஆரம்பித்த புரட்சியை சங்கமனின் வாரிசுகள் முடித்து வைத்தனர்**

## 12.சங்கமனின் ஐந்து வாரிசுகள்:

**யாதவபேரரசு வீழ்ச்சியுற்றதும் காகதீய பேரரசில் சேர்ந்தனர்.காகதீய பேரரசு வீழ்ச்சியுற்றதும் காம்பிலி தேவனிடம் வேலை செய்தனர்.காம்பிலி தேவன் கொல்லபட்டு சங்கமனின் புதல்வர்கள் டெல்லி சிறையில் அடைக்கபட்டனர்.**

**மூன்றாம் வல்லாளன் தலைமையை ஏற்று கொல்லா மக்கள் சுல்த்தானிய ஆளுநருக்கு எதிராக கிளர்ச்சி.ஐந்து புதல்வர்களும் முஸ்லீமாக மாற்றி கலகத்தை அடக்க வருதல்.தென்னிந்தியா புரட்சியின் தலைவனான மூன்றாம் வல்லாளனை தலைவனாக ஏற்றுக்கொள்ளுதல்.மீண்டும் இந்துவாக வித்தியாரண்ணியரால் மாற்றபட்டு வல்லாளன் இறந்த பிறகு விஜய நகரை பேரரசாக மாற்றதல்.**

## 13. விஜயநகர பேரரசு:

**விஜய நகர பேரரசு உருவாக்கமே ஒரு விந்தையான ஒன்று.தக்காணத்தில் சுல்த்தான் படையெடுப்பால் எந்தெந்த பேரரசு எல்லாம் வலிமை குன்றி தலைமையை இழந்ததோ (யாதவ பேரரசு,காகதீயர்கள்,ஹொய்சாளர்கள்) அந்த தளபதிகளால் கூட்டணி**

**உருவாக்கி அமைக்கப்பட்டது ஆகும்.அதற்குரிய செல்வம் ஹரிகர புக்கர்களிடம் சிக்கியது.விசயநகர அரசு தோற்றம் பெற்றகாலத்தில் தமிழகத்தின்வடபகுதி ராஜகம்பீர ராஜ்யம் என்றழைக்கப் பெற்சம்புவரையர்களின் ஆட்சிப்பகுதியாகவும் , கொள்ளிடத்தின் தென் கரையிலிருந்து இராமேஸ்வரம் வரை உள்ள பகுதி மதுரைசுல்தான்களின் கட்டுப்பாட்டிற்குள்ளும் திகழ்ந்தது.**

**அரிகரர்**

**விசயநகரப் பேரரசராக இருந்த போது (1336 - 1355) அவரது தம்பி புக்கரின் தலைமையில் பெரும்படை ஒன்று முதன்முதலாகத்தமிழகத்தின் மீதுபடை எடுத்து வந்து, தங்களின் மலோதிக்கத்தைச்செலுத்தத் தொடங்கியது. கி.பி. 1363- இல் வீரகம்பணன் குமாரகம்பணன்) கண்டரஊனி மாராயன் எனும் தளபதியுடன், இராஜகம்பீர ராஜ்யத்தின் மீதுபடைஎடுத்து வந்த இராஜநாராயண சம்பு வரையனை வென்று, பின்பு கொங்கு தேசச் சிற்றரசர்களையும்வென்று, தமிழகத்தின் வடபகுதியைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள்கொண்டு வந்தார். கி.பி. 1371- இல் மீண்டும் தாமிரபரணி வரை படை எடுத்து வந்து மதுரை சுல்தான் பக்ருதீன் முபாரக் ஷாவைவென்று, தென்தமிழகம் முழுவதையும் தங்கள் கட்டுப்பாட்டிற்குள்கொண்டு வந்தார். அதுமுதல் தமிழகம் முழுவதும் விசயநகரஅரசின் முழுக் கட்டுப்பாட்டிற்குள் வந்தது.குமார கம்பணன் புக்கரின் மகன். கம்பணனின் கல்வெட்டுகள் தமிழகத்தில் கி.பி. 1352 முதல் கிடைக்கின்றன. இவனது தென்னகப்படையெடுப்பை, கம்பணனின் மனைவியான கங்கமாதேவிமதுராவிஜயம் என்ற தனது நூலில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளாள்.**

**விசயநகரப் பேரரசின்கீழ்த் தமிழக நிருவாகம்**

**தமிழகத்தைக் கைப்பற்றிய குமாரகம்பணன் தன் உயர்நிலை அலுவலர்களின் துணை கொண்டு ஆட்சியை மேற்கொண்டார்.சோமப்ப தன்னனாயக்கர், கண்டரகூளி மாராயர், அணிகொண்டவிட்டப்பர், கோபணராயன், சாளுவமங்கு போன்றோர் குறிப்பிடத்தக்க உயர் அலுவலர்கள் ஆவர். மகாபிரதானி, தன்னனாயக்கர், கருவூல அதிகாரி, ஓலை நாயகம், அடப்பம்,கண்காணி, சுவாமி துரோக கண்டன் என்போர் பேரரசருக்கு உதவியாக இருந்த உயர் அலுவலர்கள் ஆவர்.**

**ஆட்சி முறை**

**விசயநகர ஆட்சி முறை நடுவண் ஆட்சி, மாநிலஆட்சி,ஊராட்சி எனும் மூன்று பிரிவுகளின் கீழ் அமைந்தது. நடுவண்ஆட்சி அல்லது மைய ஆட்சியில் பேரரசர், அமைச்சரவை,செயலகம் ஆகிய உறுப்புகளும், வருவாய்த் துறை, சட்ட நிருவாகத்துறை, நீதித்துறை, காவல் துறை, படைத்துறை முதலிய துறைகளும்அடங்கியிருந்தன.**

**நாட்டு ஆட்சி பரந்து பட்ட விசயநகரப் பேரரசு பல இராஜ்யங்களையும்,மண்டலங்களையும் கொண்டதாகத் திகழ்ந்தது.**

1. **பெனு கொண்டா,**
2. **உதயகிரி**
3. **சந்திர கிரி,**
4. **படை வீடு,**
5. **திருவாடி,**
6. **முலுவாயி,**
7. **சர்தலிக ஆயிரம்,**
8. **ஆரகம்,**
9. **துளுநாடு.**

**என்பன போன்ற இராஜ்யங்கள் விசயநகரப் பேரரசின் கட்டுப்பாட்டிற்குள் திகழ்ந்தன.தமிழகத்தைச் சார்ந்த தொண்டீர மண்டலம் (தொண்டைமண்டலம்) சோழ மண்டலம், பாண்டி மண்டலம் போன்ற மண்டலங்களும், படை வீடுராஜ்யம், திருவாடி, கொங்குதேசம்போன்ற நாட்டுப் பகுதிகளும் விசயநகரப் பேரரசின் கீழ்த் திகழ்ந்தன.**

**பேரரசன்:**

**பேரரசனை மக்கள் கடவுளின் அம்சமாகவே மதித்தனர்.பேரரசர்களும் தெய்வீகக் கோட்பாடுகளைப் பின்பற்றி நாட்டைஆட்சி செய்தனர். அளவிடற்கரிய அதிகாரங்களை அரசன்பெற்றிருந்தாலும் கொடுங்கோலனாக இல்லாத நிலையே இருந்தது.வேதங்கள், தர்ம சாத்திரங்கள், நீதி நூல்கள், அரச தந்திரங்கள்முதலியவற்றின் அடிப்படையில் அமைந்த நடைமுறைச் சட்டங்களையே செயல்படுத்தினர். அரசன் பெரும்பாலும் சமயசமூக நடைமுறைளில் தலையிடுவதில்லை. சமுதாயப் பழக்கவழக்கங்களை மதித்துப் போற்றினர்.**

**பேரரசரவை**

**விசயநகர மன்னர்கள் காலத்தில் அமைச்சரவையோடுஅரசரவையும் இருந்தது. பிரதானியையும், பேரரசரின் நெருங்கியஉறவினர்களையும் கொண்ட இத்தகைய அரசரவைகள் தற்காலத்தில் மேலவைக்கு ஒப்பானவையாகும். இவ்வவையின் கூட்டங்களில்அமைச்சர்கள், துறைத் தலைவர்கள், அமர நாயன்காரர்கள்,இளவரசர்கள், தளவாய்கள், வணிகக் குழுவினர் ஆகியோரும்கலந்து கொள்வர். சில நேரங்களில் அயல்நாட்டுத் தூதர்களும்பங்கேற்றனர்.**

**அமைச்சரவை**

**பேரரசனின் செயல்பாடுகளுக்கு உற்ற துணையாய்த் திகழ்வதுஅமைச்சரவையேயாகும். இரண்டாம் தேவராயரின்அமைச்சரவையில் இருபது அமைச்சர்கள் இருந்ததாக நூனிசு என்பார் குறிப்பிட்டுள்ளார். (நூனிசு- Nuniz- என்பவர் விசயநகரப்பேரரசின் ஆட்சிக் காலத்தில் விசயநகரத்திற்கு வந்த வெளிநாட்டுப்பயண எழுத்தாளர். இவர் ஒரு முஸ்லிம் எழுத்தாளர்.)அமைச்சரவை பேரதிகாரம் பெற்றதாக விளங்கியது. ஒரே அமைச்சர் பல பேரரசர்களுக்கு அமைச்சராகவும் திகழ்ந்துள்ளதை அறியமுடிகிறது. அரசினரின் உறவினர்களும் ; அறிவு, திறமை,தியாகவுணர்வு,தன்னலமில்லாத தன்மை ஆகிய பண்புகளைஉடையவர்களும் ; அரச நிர்வாகம் பற்றிய நூலறிவும், அறநூல் அறிவும் பெற்ற ஐம்பதுக்கும் எழுபதுக்கும் இடைப்பட்ட அகவையும்(வயது) நல்ல உடல் நலமும் உள்ளவர்களும் ஆகியோர்அமைச்சர்களாகும் வாய்ப்பு இருந்தது. மகாபிரதானி,உபபிரதானி, சிரபிரதானி, சர்வசிரபிரதானி, தண்ட நாயகம் போன்றபதவி பெற்றவர்களே அமைச்சர்களாகத் திகழ்ந்தனர்.**

**செயலகம்**

**தென்னகம் முழுவதையும் ஆட்சி செய்த விசயநகரப் பேரரசின்அலுவலர்களைத் தலைநகரில் இருந்த செயலகம் நிருவகித்தது.இராயசம் என்னும் உயர்நிலை அலுவலரே இச்செயலகத்தின்தலைவராக விளங்கினார். கர்ணீகம் எனும் பிரிவு அரசின்கணக்குகளைக் கண்காணித்தது. சுவர்ண நாயகர் என்பவர் அரசின்பொன் இருப்பின் பொறுப்பாளர் ஆவார். பிற அரண்மனைப்பணிகளை மனெய பிரதானி என்பவர் மேற்கொண்டார். இவருக்குக்கீழ்ப் பல அலுவலர்கள் இருந்தனர். வாசல் எனும் அதிகாரி பேரரசர் மற்றும் அரண்மனைப் பாதுகாவல் பொறுப்புவகிப்பவராவார்.**

**அடப்பம் எனும் அலுவலர் மன்னனுக்கு அவ்வப்போது வெற்றிலை, பாக்கு அளிக்கும் பணியோடு, அவருக்கு நம்பிக்கைக்குரிய ஆலோசகராகவும் விளங்குபவராவர். அரசனதுஆணையை நேரடியாக ஏற்று உடனடியாகச் செயல்படுத்தும்அதிகாரிகள் அஜனதாரகர், அஜனபரிபாலகர் என்றும் அழைக்கப்பெற்றனர். இவர்கள் அனைவரும் ஒருங்கிணைந்து அரசுசெயலகத்தை நிருவகித்தனர்.வருவாய்த் துறையும் வரிகளும் நிலவரி வருவாய்த்துறை ‘அத்வனம்’ எனப்பட்டது. இதற்கெனத்தனி அமைச்சரும், அவருக்கு உதவியாக அலுவலர்களும்இருந்தனர். ஊர்களில் வரித்தண்டல் செய்யும் அலுவலர் தானிகர்ஆவார். முறையான பதிவேடுகள் மூலம் பதிவு செய்து வரிவசூல்முறையைக் கையாண்டனர். நன்செய், புன்செய், தரம், நீர்பாய்ச்சல்,பயிர் விளைச்சல், விளைபொருள்கள் முதலியவற்றிற்கேற்பவரித்தண்டல் செய்தனர். புன்செய் நிலத்தில் விளையும்தானியங்கள், கிழங்கு வகைகள் ஆகியவற்றைத் தனித்தனியேமதிப்பிட்டனர். மானாவாரிப் பயிருக்குத் தனியாகவும், ஆற்றுநீர் அல்லது ஓடை நீர்ப் பாசன நிலங்களுக்குத் தனியாகவும் வரிவிதித்தனர்.**

**வீடுகளுக்குச் செலுத்தப்படும் வரி மனைவரி அல்லது வாசல் பணம் எனப் பெற்றது. கர்ணீக சோடி, தலையாரிக் காணம், நாட்டுக் கணக்கு வரி, இராயச வர்த்தனை, அவசர வர்த்தனை, அதிகார வர்த்தனை ஆகியவை நிருவாகச் செலவுகளுக்காக வாங்கப் பெற்றவரிகளாகும். அரசு கட்டளையைக் கொண்டு வருபவனுக்குச்செலுத்தும் கட்டணம் நிருபச் சம்பளம் எனவும், வயல்களுக்கு நீர்பாய்ச்சும் போது கண்காணிக்கும் அதிகாரிக்குச் செலுத்தும் கட்டணம் நீர்ப்பாட்டம் எனவும், ஊர்க்காவலுக்குச் செலுத்தும்கட்டணம் பாடிகாவல் என்றும் அழைக்கப் பெற்றன. காணிக்கை,மகிமை, கட்டளை, பிரசாதக்காணிக்கை, பிடாரி வரி,விபூதிக்காணிக்கை, ஆடிப்பச்சை, கார்த்திகை காணிக்கை என்பனகோயில்களுக்கும், சத்திரங்களுக்கும் செலுத்தப்பெற்ற கட்டணங்களாகும்.**

### நாணயங்கள்

**விசயநகர ஆட்சியில் தங்கம், வெள்ளி, செம்பு ஆகியஉலோகங்களாலான காசுகளே புழக்கத்தில் இருந்தன. வராகன்,பரிதாபு, கால்வராகன் பணம், காதி, ஹாக, கத்யாணம், பகோடா எனப்படும் பொற்காசுகளும், தார் எனப்படும் வெள்ளிக் காசும்,பணம், ஜிதால் காசு எனப்படும் செப்புக்காசுகளும் புழக்கத்தில்இருந்தன. இராமன், அனுமன், கருடன், இலக்குமி நாராயணன்,வேங்கடேசர், விருபாட்சர், சங்கு, சக்கரம், பன்றி, யானை,**

**எருதுஆகிய உருவங்கள் பொறிக்கப்பெற்றும் மன்னர்களின் பெயர்கள் எழுதப்பெற்றதுமான காசுகளை வெளியிட்டனர்.**

**பல்வேறு துறைகள்**

**விசயநகர மன்னர்களின் ஆட்சியில், தொழில்துறை, நீதித்துறை,காவல்துறை, படைத்துறை போன்ற பல்வேறு துறைகள் மிகவும்சிறப்பாகச் செயல்பட்டு வந்தன.தொழில் துறைகள்நெசவு, உலோகத் தொழில்கள், சர்க்கரை காய்ச்சுதல், கள்இறக்குதல், பனைவெல்லம் தயாரித்தல், அவுரியிலிருந்து சாயம் இறக்குதல், பருத்தி நூல் நூற்றல், பட்டு நெசவு, எண்ணெய்எடுத்தல், தென்னை நாரிலிருந்து கயிறு திரித்தல், சுரங்கத் தொழில்,படைக்கருவிகள் செய்தல், மரத்தொழில், உப்புகாய்ச்சுதல் எனப் பலதரப்பட்ட தொழில்களும் விவசாயமும் சிறப்படைந்திருந்தன. இத்தொழில்களைக் கண்காணிக்கவும், வரித்தண்டல் செய்யவும் அதிகாரிகள் இருந்தனர்.**

**நீதித்துறை**

**வழக்குகளைத் தர்ம சாத்திரங்கள் அடிப்படையிலேயேவிசாரித்து நீதி வழங்கினர். தனநாயகர், தண்ட நாயகர் எனஅழைக்கப்பட்ட அலுவலர்கள் நீதிபதிகளாக விளங்கினர்.தர்மாசனம் எனும் ஊர் வழக்கு மன்றம், ஆயக்காரர் வழக்குமன்றம் எனும் பன்னிருவர் விசாரிக்கும் வழக்கு மன்றம்,சாதிக்குழுக்களுக்கான வழக்கு மன்றம் எனப் பலதரப்பட்டநீதிமன்றங்கள் செயல்பட்டன. நாட்டுக்கோ, ஊருக்கோ,அரசனுக்கோ தீங்கு செய்பவர்களைக் கடுமையாகத் தண்டித்தனர்.திருட்டு வழக்குகளில் ஈடுபட்டோருக்கு, கைகால்களைக் குறைக்கும்தண்டனை முறை வழக்கத்தில் இருந்தது.**

**காவல்துறை**

**குற்றங்கள் நடவாதவாறு கண்காணிக்கக் காவல்துறை இருந்தது.அரசே அமைத்த காவற்பிரிவு, ஊர்மக்கள் ஏற்படுத்திய காவற்பிரிவு,இவை தவிர தலைநகர்களில் தனிக்காவற்பிரிவு ஆகியவைஇருந்தன. ஊர்க்காவல் தலையாரி என்போர் மூலமாக நிகழ்ந்தது.நாட்டுக்காவலை, ‘பாடிகாவல்’ என்ற வரிமூலம் நிருவகித்தனர். அரசகாவற்காரர்கள் பலர் பின்னாளில் பாளையக்காரர்களாக மாறினர்.**

## படைத்துறை

**அரசர்கள் அமைத்த நிலைப்படை, நாயக்கர்கள், தளவாய்கள்,பிரதானிகள் போன்றோர்தலைமையின் கீழ் இயங்கின.அரசர்படையில் திறமையான வீரர்கள் மட்டுமே பணிபுரிய இயலும்.அமைதிக்காலங்களிலும், போர்க்காலங்களிலும் படை வீரர்கள் தரும விதிப்படியே செயல்பட்டனர். பேரரசுக்கு உட்பட்ட ஒவ்வோர்நாட்டிலும் துர்க்கம் எனப்படும் பாதுகாப்புமிக்க கோட்டைகள்இருந்தன. நீரால் சூழப்பட்ட கோட்டைகளை ஜலதுர்க்கம் என்றும்,நிலத்தால் சூழப்பட்ட கோட்டையைத் தலதுர்க்கம் என்றும், மலைமீது**

**அமைந்த கோட்டையை கிரிதுர்க்கம் எனவும், காடுகளால்சூழப்பட்ட கோட்டையை வனதுர்க்கம் எனவும் அழைத்தனர்.இத்துர்க்கங்களை படைத் துறையே காத்தது படைத் துறை .**

## 14.கிருஷ்ண தேவராயர்:-

**கிருஷ்ண தேவராயர் வைணவரவாக இருந்தாலும் அரச மதமாக வைணவத்தை உருவாக்கவில்லை.பாமினி சுல்த்தான் முகமதுஷா பீஜப்பூர் சுல்த்தான் யூசப் அடில்கானின் துண்டுதல் பேரில் படையெடுத்தார்.அதோனி என்ற இடத்தில் விஜய நகரின் படைகள் தடுத்து நிறுத்தினர்.போரில் படுதோல்வி அடைந்த பாமினி சுல்த்தான் முகமது படுகாயமுற்றார்.படை பின்வாங்கியது என்றாலும் சுல்த்தான் படையை விடாது அடித்து துரத்தி விரட்ட ஆணை பறந்தது.முகமது ஷா வை போருக்கு தூண்டிய அடில்கான் கொல்லப்பட்டார்.ரெய்ச்சூர் கோட்டையை கைப்பற்றி பின்னர் குல்பர்க்கா, பீரார் கோட்டைகளை வரிசையாக ஒவ்வொரு நாளும் தட்டி பறித்து புலியாக முன்னேறி சென்றதை பார்த்த பாமினி சுல்த்தான்கள் பருந்து கண்ட பாம்பாய் பயந்து நடுங்கினர்.போரில் தோற்ற முகமதுஷாவை கப்பம் கட்ட சொல்லி மீண்டும் அரியணையில் அமர்த்தினர்.முகம்மது ஷா மீண்டும் அரசனாக முடி சூட்டபட்டதை கேட்ட மற்ற சுல்த்தான்கள் பொறாமையும் கோபமும் கொண்டனர்.இவ்வாறு தம் எதிர்த்த பகைவர்களுக்குள் பகைமையை ஊட்டி அவர்களுக்குள் இருந்த ஒற்றுமையை கலைத்தார்.இந்து மன்னர்கள் சுல்த்தான் பாதம் தொட்டு வணங்கி கப்பம் கட்ட வேண்டும் என்ற சொன்ன சுல்த்தானின் ரெய்ச்சூரை கைப்பற்றினார்.சுல்த்தான் தூதுவனை அனுப்பி முறையற்றது நீங்கள் செய்வது என்றான் .**

**ரெய்ச்சூர் மீண்டும் ஒப்படைக்க பட வேண்டும் என்றார்.ரெய்ச்சூர் ஒப்படைக்க பட வேண்டுமானால் சுல்த்தான் ராயரின் பாதங்களை வணங்கி முத்தவிட வேண்டும் என்று நிபந்தனை வைத்து பதிலடி கொடுத்தார்.விஜய நகரில் இருந் தொட்டிய கொட்டியம் நாயக்கர்கள் போருக்கு செல்வது என்றால் திருமண மேடைக்கு செல்வது போல ஆசையோடு சென்றனர்.கிருஷ்ண தேவராயரின் உப்பை தின்று வளர்ந்ததால் அவருக்கு விஸ்வாசமாக இருந்தவர்கள்.தந்தை என்றும் பாராமல் தட்டி தூக்கி வர சென்ற நாகம நாயக்கரின் மைந்தர் விச்சுவின் விஸ்வாசம் வானளாவியது.சேதுவுக்கு சென்று அங்குள்ள பெருமாளை வணங்கி, தனுஷ்கோடிக்கு சென்று இரத்தக்கறை படிந்த வாளை கடலில் கழுவி தலைநகரம் திரும்பினர்.மன்னர் கால பெரிய தலை நகரங்கள் எல்லாம் கிராமாகவும்,வெள்ளைக்கார சிறுகிராமம் எல்லாம் பெரு நகரங்களாக வளர்ச்சியயடைந்து நிற்கிறது.**

**முகலாய மன்னன் பாபருக்கு தென்னிந்தியா சக்கரவர்த்தி கிருஷ்ண தேவராயரிடம் இருந்து ஒரு ஓலை. வடந்தியா அரசர்களின் ஒற்றுமையின்மையால் வட இந்தியாவை நீங்கள் பிடித்து ஆட்சி அமைத்துவிட்டீர்கள் வாழ்த்துக்கள்.தென்னிந்தியா முழுவமும் ஒற்றுமையின் ஊற்றுக்கண்ணாய் உள்ளது. மறந்தும் கூட தென்னிந்திய படையெடுப்பை பற்றி சிந்தித்து விடாதீர்கள். சிந்தித்தால் உங்கள் தோல்வி எழுதப்படாத விதி.உங்கள் அழிவை தாங்களாக தேடிக் கொள்ள மாட்டீர்கள் என நினைக்கிறேன்.அவசர அவசரமாக கிருஷ்ண தேவராயரை பற்றி விசாரித்த பாபர் அதிர்ந்து போய் தென்னிந்திய படையெடுப்பை பற்றி கனவிலும் கூட நினைத்து பார்க்கவில்லை.ஏனென்றால் மலையோடு மோதி யாரும் மண்டையை உடைத்துக்கொள்ள விரும்புவது இல்லை. அசகாய சூரன் அவர்.**

## 15 *நாகம நாயக்கர்*

விஜய நகர பேரரசுக்கு கட்டுப்பட்ட நாடு ஐம்பத்தியாறு நாடுகள்.அந்த விஜய நகர பேரரசில் நாகம நாயக்கர் என்பர் இருந்தார். கம்பள பாளையபட்டுகளின் தலைமை அவரிடம் இருந்தது.அவர் ஆற்காடு முதல் நாஞ்சில் நாடு வரை பேஷ்குஷ் வாங்கி வந்தார். விஜய நகரின் கட்டுப்பாட்டில் மதுரை கி.பி 1370லிருந்து இருந்து வந்தது.பின்னர் விஜய நகர ராயர், சந்திர சேகர பாண்டியனை மதுரைக்கு மன்னனாக்கி கப்பம் வாங்கி கொண்டிருதார்.பின்னர் நிர்வாக காரணங்களால் நிலக்கோட்டை மன்னன் கூளப்ப நாயக்கர் மதுரை மன்னர் சந்திர சேகர பாண்டியரை சந்தித்து பேசிக் கொண்டிருந்த போது வீர சேகர

சோழன் படையெடுத்து வந்தார். சந்திர சேகர பாண்டியன் தோற்று ராயரிடம் கூளப்ப நாயக்கரும் பாண்டியரோடு சென்றார்**கிருஷ்ணதேவராயரின் நம்பிக்கைக்கு உரிய அதிகாரிகளில் ஒருவர், நாகம நாயக்கர். அவர் ராயரின் தளபதியாக, கோட்டையா என்றபண்டகசாலைக்காப்பாளராக, தோஷாகானா அதிகாரி என்ற பொருளாளராக, தலைமை வருவாய் அதிகாரியாக, தென்பகுதியின் அரசப்பிரதிநிதியாக, பல்வேறுவகையானப் பாத்திரங்களை ஏற்றிருந்தார்.**

**தெற்குபிராந்திய நிர்வாகத்தின் பொதுமேற் பார்வை யாளர் பொறுப்பும் அவரிடமிருந்தது. இத்தனை ஆளுமைகளுடன், அரசரின் இராணுவத்தின் ஒருபகுதியையும் அவர் தனது கட்டுக்குள் வைத்திருந்தார். அவருக்கென்று தனியே சொந்தப் படையும் இருந்தது. இதுபோன்றதொரு உயர்மதிப்பு நாகமாவுக்குக் கிடைத்ததன் பின்னணியில், அவரது முன்வரலாற்று நேர்த்தி, உதவிகரமாக இருந்தது. முந்தைய ஆட்சிகளில் அவரது செயல் பாடுகள் முக்கியத்துவம் வாய்ந்தவையாகப் பொறித்துவைக்கப் பட்டிருந்தன. சாளுவ நரசிங்கரிடம், மிகமுக்கியமானப் பணியாள ராக, நாகமா இருந்தார். அவருக்குக் கீழே பல முகவர்கள் செயல்பட்டனர். துளுவ சாம்ராஜ்ஜியத்தை நிறுவியதில் நாகமாவின் பங்கு அளப்பரியது. இதுபோன்ற அரியசேவைப் பணிகளுக்கு ஒப்புக்கொடுத்திருந்த அவரை, கிருஷ்ணதேவராயர் தன்னுடனே வைத்துக்கொண்டார். அறிவார்ந்த அரசர்கள், தங்களுக்கு முன்னிருந்த ஆட்சியாளர்களிடம் பணிபுரிந்தவர்களை தங்களுடன் வைத்துக்கொள்வது, வழக்கமான ஒன்றாகவும் இருந்துவந்தது**.தென்னாட்டின் கட்டுபாடு அவரிடம் இருந்தது.மதுரை சந்திர சேகர பாண்டியரும் விஜய நகர பேரரசுக்கு கப்பம் கட்டிக் கொண்டிருந்தார்.தீடிரென்று ஏற்பட்ட சோழ படையெடுப்பால் சந்திர சேகர பாண்டியன் ராயர் உதவியை நாடினார்.விஜயம் நகர ராயர் தென்னாடு நாகம நாயக்கர் கட்டுப்பாடு என்பதால் நாகம நாயக்கரை பாண்டியனுக்கு பட்டம்கட்டி வர சொன்னார்.நாகம நாயக்கரும் கம்பளத்தார்களை அழைத்துக்கொண்டு வந்து சோழரை வீழ்த்தி பாண்டியனுக்கு பட்டம் சூட்ட நினைத்தார்.சில காரணங்கள் பட்டம் கட்ட முடியமால் போய் பிரச்சனை ஆனது.நாகம நாயக்கர் மதுரைக்கு வருவதற்கு முன்பே நிலக்கோட்டை புக்கராயர் கம்பணன் காலத்தில் கம்பள சமஸ்தானம் உருவாகி இருந்தது.பின்னர் நாகம நாயக்கர் மதுரை வந்தபோதும் கம்பள பாளையங்கள் மதுரையை சுற்றி உருவாகின.பாண்டியனுக்கு வாரிசு இல்லாததால் விஸ்வநாதனுக்கு பட்டம் சூட்டினார்

## 16. *விஸ்வநாத நாயக்கர்*

**மிருத்யுஞ்ஜய எனும் கையெழுத்துப் பிரதி, 'விஸ்வநாதன், அவரது பதினாறு வயதிலிருந்தே அரசர் வேட்டைக்குப் போகும்போது, உடன்போகிறவராக இருந்தார் என்கின்றது.**

**தி ஹிஸ்டரி ஆஃப் கர்நாடகா கவர்னர்ஸ் ஆவணங்கள், 'வடக்கில் கிளர்ச்சிசெய்துகொண்டிருந்த சிற்றரசர்களை அடக்க, கிருஷ்ணதேவ ராயரால் விஸ்வநாத நாயக்கர் அனுப்பிவைக்கப் பட்டார்' என்கின்றது.**

**பதினாறு வயதில் அறிமுகப்படுத்தப்பட்ட விஸ்வநாதன், அரசருக்கு சேவைசெய்யும் ஒரு 'வெற்றிலைப் பெட்டியாக, தன் பணியைத் துவங்குகின்றார். பழந்தின்றுக் கொட்டைப் போட்ட வரும் எதிர்காலத்தை நுட்பமாகக் கணிக்கத்தெரிந்தவருமான நாகமா, மகனுக்குத் தோதான, நேரியப் பணியைப் பெறுவதற்கு எந்தவொரு சிரமமும் அடையவில்லை. விஸ்வநாதன் மிகஎளிதாக, அரசரின் தனி உதவியாளர்களில் ஒருவராக ஆகிப்போனார். அவரது இனிய தோற்றம், போதிக்கப்பட்ட கல்வி, ஆண்மையான தைரியம் ஆகியவை, ராயரின் மதிப்பீட்டில் அவரை மேலும்மேலும் உயர்த்திக்கொண்டே போயின. ஒரிசா மன்னருக்கு எதிரானப் படையெடுப்பின்போது, அரசருடன் அவரும் உடன்சென்றார். ஈடுபாடுகொண்ட அவரது பணியால், ஒரு படைப்பிரிவுக்கு அவர் பொறுப்பேற்றார். கி.பி. 1520ஆம் ஆண்டு ராய்ச்சூர் கைப்பற்றப் பட்டதில் அவரது பங்களிப்பும் இருந்தது. படிப்படியாக புகழின் உச்சம் நோக்கி நகர்ந்து, தந்தையைப்போலவே அரசரின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகிப் போனார். கடினமானப் பணிகளின் போதும், சிறப்பு நிகழ்ச்சிகளுக்காகவும் அவர் தனி அதிகாரத்துடன் தெற்கே பிரதிநிதியாக அனுப்பிவைக்கப்பட்டார்.அந்த ஆவணங்களில் காணப்படும் தரவுகள், 'அவர் அங்கா, வங்கா, கலிங்கா, காஷ்மீர மற்றும் நேபாள நாடுகளை தோல்வியுறச் செய்து, கீழ்ப்படுத்தியதாக'க் கூறுகின்றது. ஒரிசா மற்றும் பல இடங்களில் அரசர் இருக்கும்போதே அவர் படையெடுப்பில் மிகச்சிறப்பாகச் செயல்பட்டதாக மிகைப்படுத்திக் கூறுவதாகவும் நம்ப இடமிருக்கின்றது.இந்த சாதனைகளெல்லாம் கிருஷ்ணதேவராயர் ஆட்சிக்காலத்தில் நடந்திருப்பதற்கான வாய்ப்புகள் சற்றே அதிகம்தான். ஒருபுள்ளியில்கூடும் இந்தஆவணங்களெல்லாமே விஸ்வநாத நாயக்கர், கிருஷ்ணதேவராயரின் தலைமையில் ஒரிசா அரசருக்கு எதிராக, முகம்மதியர்களுக்கு**

**எதிராகநேர்த்தியாகச் செயல்பட்டதால், அவருக்கு மதுரையின் அரசப்பிரதிநிதித்துவம் தரப்பட்டது என்று உறுதியாக நம்பமுடிகின்றது.**

விஜய நகரப் பேரரசு (அ)பெனுகொண்டா பட்டினம் (பட்டையத்திலும் கல்வெட்டில் இருந்து இச் செய்தி எடுக்கபட்டது)..விஜய நகரப் பேரரசை கிருஷ்ண தேவராயர் ஆளும் போது 56 அரசுகள் கட்டுபட்டு இருந்தன மேலும் 40 ஆயிரம் குதிரையும் ;4000 யானைகளும்;10000 ஒட்டகங்களும் இருந்தன.விஜய நகர பேரரசில் கிருஷ்ண தேவராயரிடம் நாகம நாயக்கர் என்பவர் படைத்தலைவர்;பண்ட சாலை பொறுப்பாளர்,கருவூல பெருங்கணக்கர்,வரித்துறை தலைமை அதிகாரி என்ற நான்கு பொறுப்பும் அவரிடம் இருந்தது..அவரிடம் 6000 குதிரைகள் யானைகள்;20,000 காலாட்படை இருந்தது..நாகம நாயக்கருக்கு பலவருடங்களாக குழந்தை இல்லை..காசி விஸ்வநாதரை வேண்டிக்கொண்டதன் விளைவாக ஒரு குழந்தை பிறக்கிறது அக்குழந்தைக்கு விஸ்வநாத நாயக்கர் என பெயர் சூட்டபடுகிறது..அவனுக்கு எல்லா விதமான பயிற்சிகளையும் சொல்லித்தருகிறார்..காசி விஸ்வநாதனால் அருளால் பிறந்தமையால் என்னவோ அனைத்து பயிற்சிகளிலும் தனது பதினாறு வயதுக்குள் தேர்ச்சி பெற்றுவிடுகிறான்.ஒரு முறை கிருஷ்ண தேவராயர் நவராத்தி விழா கொண்டாட தயாரானார்..பத்திர காளிக்கு மன்னனால் வேட்டையாடி உயிரோடு கொண்டுவரப்பட்ட காட்டு எருமை மாட்டை ஒரே வெட்டில் பழி கொடுத்தால் தான் அரசு செழித்து வெற்றியோடு ஆட்சி நடத்தும்.ராயரும் காட்டில் ஒரு காட்டெருமையை விரட்டி வலை வைத்து பிடித்து கோவிலுக்கு கொண்டு வந்தார்..ஆனால் அந்த மாட்டின் கொம்பு அதன் வால் வரை நீண்டு இருந்தது..இந்த எருமையை ஒரே வெட்டில் கொல்வது இயலாது என அனைவரும் நம்பினர்.விஸ்வநாதனோ ஒரே வெட்டில் தலைவேறு உடல் வேறு என்று ஆக்கினான்.

## 17. மதுரை நாயக்கர்கள்

1.நாகம நாயக்கர்

**2.விஸ்வநாத நாயக்கர்**

**3.பெரிய கிருஷ்ணப்ப நாயக்கர்**

**4.பெரிய வீரப்ப நாயக்கர்**

**5.விசுப்ப நாயக்கர்**

**6.குமார கிருஷ்ண நாயக்கர்**

**7.முத்து கிருஷ்ணப்ப நாயக்கர் His uncle**

**8.கஸ்தூரி ரங்கப்ப நாயக்கர்**

**9.முத்து கிருஷ்ணப்ப நாயக்கர்**

**10.முத்து வீரப்ப நாயக்கர்**

**11.திருமலை நாயக்கர்.**

12.சொக்கநாத நாயக்கர்

13.ரங்க கிருஷ்ண முத்துவீரப்பா நாயக்கர்

14.ராணி மங்கம்மாள்(காப்பாளர் விஜய ரங்கசொக்கநாத)

15.விஜய ரங்க சொக்கநாத நாயக்கர்

16.ராணிமீனாட்சி

17.ராஜ விஜய குமார திருமலை நாயக்கர்-

விஸ்வநாத நாயக்கர் மதுரை நாட்டின் மன்னனாக முடி சூட்டிய பிறகு மதுரை மீனாட்சி அம்மன் கோவிலை சுற்றி இருந்த மதுரை பாண்டியனின் மண் கோட்டையை இடித்து இரட்டை கல் மதில் கோட்டையை போட்டு வைத்தார்.அப்பொழுது திருச்சியில் வழிப்பறி அதிகம் நடந்ததால் வல்லத்தை தஞ்சாவூருக்கு கொடுத்து விட்டு திருச்சியை வாங்கி இரட்டை கல் மதில் கோட்டை போட்டு காவேரியின் இருகரையிலும் காடுகள் அழித்து ஊர்கள் உருவாக்கி வழிப்பறி தடுக்கப்பட்டது.அரண்மனை கட்டப்பட்டது.தெப்பக்குளம் வெட்டப்பட்டது.ஸ்ரீரங்க கோவில் கட்டப்பட்டது.விஸ்வநாத நாயக்கரால் மதுரையை சுற்றி எழுபத்தி இரண்டு பாளையங்கள் உருவாக்கப்பட்டது.நிலக்கோட்டை பாளையம் நிலக்கோட்டை கூளப்ப நாயக்கருக்கு கொடுக்கப்பட்டது.சமஸ்தானமாக இருந்த

நிலக்கோட்டை பாளையமாக சுருங்கி நின்றாலும் மதுரை மன்னரை உயிர் போல காத்து நின்றது.

### 18.அரியநாத முதலியார்-.

தொண்டை மண்டலத்தில் மெய்பேடு(மெப்பேடு)ல் வேளாளர் குலத்தில் பிறந்தவர்..கல்வி கேள்விகளில் சிறந்தும் மற்போர் போன்ற வீரக்கலைகளை சிறுவயதிலியே கற்றுத் தேர்ந்தார்.பெரும் வீரன் இவன்.இவர் படுத்து இருக்கும் போது நாகப்பாம்பு நிழல் தந்து வெயிலில் இருந்து காத்ததாகவும்..அதைக் கண்ட ஒருவர் அவரை வணங்கி நீ இங்கே இருக்காதே! விஜய நகரத்தில் சேர்ந்தால் நல்ல எதிர்காலம் உண்டு என்றார்..பின்பு நாகம நாயக்கரிடம் விஜய நகரம் போய் சேர்ந்து வேலை பார்த்து பின் நாகம நாயக்கர் கிருஷ்ண தேவராயரிடம் அறிமுகபடுத்தினார்.பின்பு ராயர் அவர் புத்திக்ககூர்மையும் வீரத்தையும் பார்த்து பல வெகுமதிகளை தந்து இருக்கிறார்.நாகம நாயக்கரை கைது செய்ய விஸ்வநாத நாயக்கரோடு இவரும் மதுரைக்கு வந்து இருக்கிறார் பாளையபட்டு ஆட்சி முறைக்கு இவர்தான் அடித்தளமிட்டார் ..விஸ்வநாத நாயக்கர் பல போர் வெற்றிகளுக்கு இவரும் ஒரு காரணமாவார்.மீனாட்சி அம்மன் கோவிலின் ஆயிரங்கால் மண்டபம் கட்ட மதுரை மன்னனிடம் வேண்டி கேட்டுக் கொண்டவரும் இவரே..இவர் தொண்டை மண்டலத்தில் இருந்த தன் உறவினர்களை மதுரை சோழவந்தானிலும் குடியமர்த்தினார். திருமங்கலம் என்ற ஊரையும் தன் உறவினர்களுக்காக உருவாக்கினார்.

### 19.விஸ்வநாத நாயக்கர் காலத்தில் உருவான எழுபத்தி இரண்டு பாளையங்கள்.

1)வடகரை(சொக்கம்பட்டி)
2)அம்மைய நாயக்கனூர்
3)போடிநாயக்கனூர்
4)சக்கந்தி
5)மதவானையூர்
6)ரோசனைப்பட்டி
7)வீரமலை
8)பெரிய குளம்
9)குருவிகுளம்
10)அத்திப்பட்டி
11)இளசை
12)மதுவார்பட்டி

13)கோம்பை
14)கடலூர்
15)கவுண்டன் கோட்டை
16)உதயப்பனூர்(உத்தப்ப நாயக்கனூர்)
17)கொல்லங்கொண்டான்
18)குமரவடி
19)காமய நாயக்கனூர்
20)நிலக்கோட்டை
21)தேவாரம்
22)இராமகிரி
23)கல்போது
24)கன்னிவாடி
25)தொட்டப்ப நாயக்கனூர்
26)கம்பம்
27)காசையூர்
28)வாரப்பூர்
29)தோகைமலை
30)படதூர்
31)ஆயக்குடி
32)சமத்தூர்
33)விருபாட்சி
34)படமாத்தூர்
35)கண்டம நாயக்கனூர்
36)தும்பச்சி நாயக்கனூர்
37)நத்தம்
38)வெள்ளியங்குன்றம்
39)மலைப்பட்டி
40)சிவகிரி
41)சிங்கம்பட்டி
42)அழாகபுரி
43)ஊர்க்காடு
44)சுரண்டை
45)சந்தையூர்
46)ஏழாயிரம்பண்ணை
47)எழுமலை
48)எரசக்க(இராசக்க) நாயக்கனூர்
49)கோட்டையூர்
50)மருங்காபுரி
51)மன்னார்கோட்டை
52)பாவலி
53)இலக்கையனூர்
54)முல்லையூர்
55)கடவூர்
56)இடையகோட்டை

57)சேத்தூர்

58)ஊற்றுமலை

59)சொக்கம்பட்டி

60)நெற்கட்டும்செவ்வல்

61)தலைவன்கோட்டை

62)மணியாச்சி

63)கடம்பூர்

64)கோல்வார்பட்டி

65)கொல்லப்பட்டி

66)ஆற்றங்கறை

67)மேல்மாந்தை

68)குளத்தூர்

69)பாஞ்சாலக்குறிஞ்சி(குறிச்சி)

70)எட்டையபுரம்

71)நாகலாபுரம்

72)காடல்குடி(கடாலடி)

இந்த பாளையங்களை தவிர்த்து பிற்காலத்தில் அண்ணன் தம்பிகள் தங்களுக்குள் பாகம் பிரித்தும் பாளையங்களை ஆண்டனர். இதில் திண்டுக்கல் மண்டலத்தில் விஸ்வநாத நாயக்கர் கா*லத்தில் பதினெட்டும் திருமலை நாயக்கர் காலத்தில் இருபத்தியாறு பாளையமும் இருந்தன.*

**திண்டுக்கல் மண்டல தெலுங்கு கன்னட பாளையங்கள்**

**1. இடைய கோட்டை பாளைப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவாரு)**

**2. கோம்பை பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா கவுண்டர்**

**3. விருபாக்ஷி பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவார்)**

**4. சந்தையூர் பாளையப்பட்டு (கம்பளத்தில் ராஜா காமவார்) (கோப்பைய நாயக்கனூர்)**

**5. பழனி பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வேடர்)**

**6. சுக்கம்பட்டி பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா பாலமவாரு)**

**7. கூடலூர் பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா கவுண்டர்)**

**8. கம்பம் பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா)**

**9. வடகரை பாளையப்பட்டு( ராஜா காமவார்)**

**10. அம்மைய நாயக்கனூர் பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவார்)**

**11. போடி நாயக்கனூர் பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா சீலவார்)**

**12. .எமக்கலாபுரம் பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா காமவார்)**

**13, எரசக்க நாயக்கனூர் பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவார்)**

**14. கண்டமநாயக்கனூர் பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா பாலம**வா**ரு)**

**15. கன்னிவாடி பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவார்)**

**16. நிலக்கோட்டை பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவார்)**

**17. பள்ளியப்பநாயக்கனூர் (கூவக்காபட்டி)**

**பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவார்)**

**18. தேவாரம் பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா பாலமவாரு)**

விஸ்வநாத நாயக்கர் கா*லத்தில் பதினெட்டு* பாளையங்கள்



**19. தவசிமடை பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா பாலம்வாரு)**

**20. தொட்டியங்கோட்டை பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவார்)**

**21. மாம்பாறை பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவார்)**

**22 எறியோடு பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா பாலமவாரு**

**23. மடூர் பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா பாலம வாரு)**

**24. அம்பாதுறை பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா வல்லக்கவார்**

**25. மாறனூத்து பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா)**

**26. தேவதானப்பட்டி
பாளையப்பட்டு(கம்பளத்தில் ராஜா
காமவாரு)**

**சில பாளையக்கார ராயர்கள்** அடைமொழிகள்

**1)எல்லா திசையும் வெற்றி கொண்ட புண்ணியவான் சிந்தம கூளப்ப ராயன்**

**2)அண்டலரை வெட்டிய வாள் வீரன் விருப்பாட்சி ராயன்**

**3)வாணர் புகழ் அம்மை ராயன்**

**4)ஆணிக்கனகநிதி அப்புராயன்**

**5)விக்ரமகோ தண்ட சர பிணித்துரை சாமராயன்!**

**7) கெடிக் காமையன்**

**8)நத்தத்து லிங்கேந்திரன்**

**9)காளிங்கன்**

**10)திருமலை நாயக்கருக்கு மகால் எழுப்பிய ராயன்**

**11)குச்சிலிய ராயன்**

**12)கோகனக வதனன் கோபால ராயன்**

**13)கருணை நிதி பூசாரி ராயன்**

**14)தேச மெச்சும் போடி மகிபன்**

**15)நாடு புகழ் தொட்டராயன்.**

## 20. பாண்டியர்களுடனான உறவு –

**முத்துவீரப்ப நாயக்கரின் ஆட்சிக்காலத்து ஸ்ரீவல்லப மற்றும் வரதுங்க பாண்டியர்களின் புதுக்கோட்டை ஏடுகள், தஞ்சாவூர் போரில் பாண்டியர்கள் முத்து வீரப்ப நாயக்கருக்கு முழுஆதரவு நல்கியதைத் தெளிவுபடுத்துகின்றன. கால்டுவெல்," அதிவீரராம பாண்டியனை பிற்காலப் பாண்டியர்களில் கடைசி அரசனானக் கருதுகின்றார். மேலும், 1610 ஆம் ஆண்டுக்குப் பின்பே இறந்திருக்கக்கூடும் என்றும்**

**மதிப்பிடுகின்றார். ஆனால் டாக்டர் பர்னல், அதிவீரராம பாண்டியனுக்குப் பின்னால் பதவியேற்ற சுந்தரபாண்டியனுக்கு, அவனது பதிமூன்றாவது ஆட்சி ஆண்டாக, 1622ஆம் ஆண்டின் ஆவண மொன்றைக் காட்டுகின்றார். முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சிக் காலத்தில் பாண்டியர்களின் கல்வெட்டு ஆவணங்கள் நடை முறையில் நம்பத்தகுந்ததாக இருக்கவாய்ப்பில்லை. டி.ஏ. கோபிநாத ராவ் 1753 ஆம் ஆண்டு வரையிலானப் பாண்டியர்களின் பட்டியலைக் கொடுக்கின்றார். இயேசு சபையின் 1666ஆம் ஆண்டின் ஆவணம், வழக்கொழிந்துபோன தென்காசிப் பாண்டியர்"களின் பட்டியலை விவரிக்கின்றது. முத்துவீரப்ப நாயக்கரின் ஆட்சிக் காலத்துக்குப் பின்பு, 'உண்மையானப் பாண்டிய ஆட்சியாளர்கள் யாரும் இருந்தார்களா?' என்று தெளிவாக எதுவும் இல்லை.ஆகமொத்தத்தில், பாண்டியர்கள் மதுரை நாயக்கர்களுக்கு விசுவாசமாகவே இருந்து வந்தது தெளிவாகின்றது. விஸ்வநாத நாயக்கர், முதலில் பாண்டியர்களை வெற்றிகொண்டதையே, பின்னர்வந்த முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கரும் முத்துவீரப்ப நாயக்கரும் தற்புகழ்ச்சிக்காக தாங்களும் வென்றதாகச் சொல்லிக் கொள்கின்றனர். விஸ்வநாத நாயக்கருக்குப் பின்பு, முற்கால நாயக்கர்கள் யாரும் பாண்டியர்களுக்கு எதிராக, ராணுவ நடவடிக்கை மேற்கொண்டதாக எங்கும் காணோம். பாண்டியர்களின் உள்நிர்வாகத்தில் நாயக்கர்கள் தலையீடு எதுவும் செய்யவுமில்லை. அதேவேளையில் திறைசெலுத்தச் சொல்லியும், தேவைப்படும்போது ராணுவ உதவியை மட்டுமே பெற்றுக் கொண்டுள்ளனர். திருவாங்கூரிலிருந்து படையெடுப்பு எதுவும் நடந்துவிடாமலிருக்க, பெயரளவுக்கான சுதந்திரம் பாண்டியர் களுக்கு வழங்கப்பட்டிருந்தது. மதுரையில் நாயக்கர்கள் ஆட்சி அமைந்தபின்பு, ஒருநூற்றாண்டு காலம் பாண்டியர்கள் தொடர்ந்து இருந்துவந்தது தெரிகின்றது.**

## 20 A.*நிலக்கோட்டை சமஸ்தானம்:*

சந்திர வம்சத்தில் யது மகாராஜா தோன்றினார்கள்.அந்த யது மகராஜா வம்சத்தில் ஒன்பது கம்பள ராஜாக்கள் உதித்தார்கள்.

அந்த ஒன்பது கம்பளத்தில் வல்லக்கவார் வம்சமும் ஒன்று.

வல்லக்கவார் வம்சத்தில் நூற்றி ஒன்று ராஜாக்கள் தோன்றினார்கள்.

அந்த நூற்றி ஒன்றில் விஜய நகர மாக்கிய நாயக்கர் உதித்தார்.இந்த மாக்கிய நாயக்கர் விஜய நகருக்காக பல வெற்றிகளை தேடி தந்தவர்.அதிலும் குறிப்பாக மதுரை சுல்த்தானியத்தை எதிர்த்து விஜய நகர மன்னன் புக்கரின் மகன் குமார கம்பணன் தலைமையில் நடைபெற்ற

போரில் படைத்தளபதி வல்லாள மாக்கிய நாயக்கரின் வீரம் சற்று ஒருபடி உயரம் தான்.இந்த படையின் தலைமை படைத்தளபதி சாளுவ மங்கும் ஒரு வல்லக்கவார் தான்.விஜய நகரை கைப்பற்றிய இராண்டாவது சாளுவ வம்சத்தை தோற்றுவித்த யாராலும் வெல்ல முடியாத நரசிம்ம தேவராயரும் வல்லக்கவார் வம்சம் தான்.

## *சிவப்புக்கச்சை*:

முகமதியர் படையெடுக்க போகிறார் என தெரிந்ததும் ராயர் அவர்கள் கம்பள ராஜாக்களை ஒவ்வொருவராக அழைத்தார்போருக்கு போக வேண்டும் தங்கள் உதவி எங்களுக்கு வேண்டும் என்று அரசவைக்கு அழைத்தார்.அதில் வல்லக்கவார் குல அரசர்களை இளவரசர்களை இவ்வாறு அழைத்தார்.பெண்ணாசை இல்லாதவர்கள்,முன்னுக்கு நடக்கபட்டவர்கள்(நேர்மையாளர்கள்) அவர்கள் போர்க்களத்திற்கு போக வேண்டும்.வைத்த காலை பின்வாங்க கூடாது.குதிரையில் இருந்து இறங்கினால் வெற்றியோடு,இல்லை பிணமாக இறங்க வேண்டும்.தாம்பூலம் வாங்கி உறுதிபடுத்துங்கள் என்றார்.

சிவப்பு கச்சைகளை எடுத்து கொள்ளுங்கள் என்றார்.யார் போர்புரிகிறார்கள் என தெரிந்து கொள்ள,எந்த வீரர்கள்,இளவரசர்கள் போரில் மடிந்து உள்ளார்கள் என தெரிந்து கொள்ள கச்சையை இடுப்பில் கட்டுவது வழக்கம்.அதில் இடுப்பில் சிவப்பு கச்சை கட்டி இருந்தால் வல்லக்கவார் குலம் ஆகும்.போரில் சுல்த்தானியத்தை வென்ற மாக்கிய நாயக்கருக்கு பல பரிசுகள் கொடுக்கபட்டன.

அந்த மாக்கிய நாயக்காரின் வம்சத்தில்

நிலக்கோட்டை பாளைய மகாராஜா-கூளப்ப நாயக்கர்

2)அம்மையநாயக்கனூர் பாளைய மகாராஜா-அம்மையப்ப நாயக்கர்

3)விருப்பாட்சி பாளைய மகாராஜா-சின்னப்ப நாயக்கர்

4)கன்னிவாடி பாளைய மகாராஜா-அப்பைய நாயக்கர்

5)தொட்டியான் கோட்டை பாளைய மகாராஜா-பொம்மண்ண நாயக்கர்

6)இடைய கோட்டை பாளைய மகாராஜா-எற்றகுடி திம்மைய நாயக்கர்

7)பல்லியப்ப நாயக்கனூர் மகாராஜா-லக்கம நாயக்கர்

**8 )**எர்றசை நாயக்கனூர் போன்ற மகாராஜாக்கள் உதித்தார்கள்.மேற்கண்ட திண்டுக்கல்லை சுற்றை எல்லைகள் பிரித்துக்கொண்டு காடுகளை அழித்து ஊர்களை உருவாக்கி கொண்டு ஆண்டு வந்தார்கள்.விஜய நகர ராயர் மாக்கிய நாயக்கருக்கு விஜய நகர ராயரால் கொடுக்கபட்ட கௌரவ பட்டங்கள்,பரிசுகள் கீழே வருவன:

1)பகல்தீவட்டி:- கூளப்ப நாயக்கர் விழாக்களில் பங்கேற்க்கும் போது,கூளப்ப நாயக்கரை சந்திக்க வரும்போது பகல் வேளையாக இருந்தாலும் தீப்பந்தங்களை ஏந்தி வருவர்.

2)வெண் சாமரம்:-இராசசின்னமாகக் கொள்ளப்படும் கவரிமானின் மயிர்க்கற்றையினால் செய்யப்பட்ட விசிறி.

3)சிங்கலாடத்துடத்துடனே கூடிய கனக பல்லாக்கு:-ராஜா சென்று வர.

4)மும்முரசு:- அறிவிப்பபை வெளிப்படுத்த.

5)சாமத்துறோக வெண்டயம்:- வலது காலில் போடுவது.

6)நிகளம் சங்கிலி:-வலது காலிலே போடுகிறது

7)ஒண்டிரேகு துறாயி:- தலையில் அணிவது.

8)வீரகாண்டாமணி:- கழுத்திலே அணிவது.

9)வெண்கலப்பேறியுடன் ஒட்டகம்:-.போரில் பயன்படுத்துவது

10)சிங்க,கரடி,புலித்தோல் முகப்பட்டா:- .போரின் போது பயன்படுத்துவது

11)வெள்ளைக்கொடி

12)வெள்ளை சுருட்டி

13)வெள்ளாடல்

14)பச்சைக்கொடை

15)பச்சை சுருட்டி

16)கருடாடல்

17)வெள்ளாடல்(பகறடால்)

18)ரணசிங்க பாசிகம்

19)கலிகி துறாயி உடன் வெள்ளைக்குதிரை

20)சிங்க கொடி

21)வராக கொடி

22)வீரத்தண்டை

23)அம்பாரியுடன் யானை

24)முன் பின் செல்லும் மணி

25)அன்னக்கொடி.

**விஜய நகரத்தின் இராணுவ கோட்டைகள்...**

**விஜய நகர பேரரசின் மீது அந்நிய படையெடுப்பை தடுப்பதற்கும், உள் நாட்டு கலகங்களை அடக்குவதற்கும் பல கோட்டைகள் இருந்தன.மாராட்டிய மன்னர்கள் விஜய நகர மன்னர்கள் கட்டிய கோட்டைகள் அமைப்பு முறையை பின்பற்றினர். அனந்தபூர் மாவட்டத்தில் உள்ள குத்தி என்னும் இடத்தில் உள்ள கோட்டை புக்கராயர் காலத்தை சேர்ந்தவை.அந்த கோட்டையை கல்வெட்டு ஒன்றில் "விஜய நகர பேரரசின் இறைமையை காப்பாற்றும் சக்கரத்தின் அச்சாணி போன்றது என புகழ்ந்து உள்ளனர்.**

**1)தல துர்க்க கோட்டை என்பவை நிலத்தில் அமைந்தவை.**

**2)நீர் துர்க்க கோட்டை என்பவை ஆறு, குளங்கள்,கடல் முதலியவையால் சூழப்பட்டவை.**

**3)வனத்துர்க்க கோட்டை என்பவை வனங்களுக்கு மத்தியில் அமைந்தவை**

**4)கிரி துர்க்க கோட்டை என்பவை மலை மீது அமைந்தவை**

**5)புதிதாக நாட்டில் சேர்க்கபட்டவைகளில் உள்நாட்டு கலகங்களை அடக்க படை பற்று கோட்டைகள்.**

**கோட்டை சுவரில் நடப்பதற்கு பாதையும்,பீரங்கிகள் அமைப்பதற்கு ஏற்ற மேடுகளும்,வீரர்கள் மறைந்து இருந்து பதுங்கு குழிகள் மற்றும் கோட்டையைச் சுற்றி அகழிகளும் இருந்தன.கோட்டையின் மத்தியில் அரண்மனை இருந்தன.கோட்டையின் மத்தியில் கொடிக்கம்ப மேடு அரண்மனைக்கு எதிரில் இருந்தன.விஜய நகர** மாக்கிய நாயக்கரின் மூத்த குமரான கூளப்ப நாயக்கர் காடுகளை அழித்து கோட்டை போட்டு அக்கோட்டைக்கு நிலைக்கோட்டை என பெயரும் வைத்து கி.பி 1366ல் ஆட்சி செய்து வந்தனர்.

## 21. நிலக்கோட்டை அரண்மனைக்கோட்டை

**விஜய நகரத்தை உருவாக்கிய நாயக்க மரபை சேர்ந்தவர்கள் கூளப்ப நாயக்கரின் முன்னோர்கள்(தொட்டிய கம்பள வல்லக்கவார்) என்பதால் நிலைக்கோட்டை காலத்தால் அழியக்கூடாது என்று எண்ணி என்றும் நிலைக்கும் கோட்டை நிலைக்கோட்டை என்றும் மற்றும் நிலத்தில் மேல் இக்கோட்டை அமைந்ததால் நிலக்கோட்டை என்று ஒரு சொல் இரு பொருள் தரும்படி வைத்து உள்ளனர்.**

**மதுரையின் நிலைப்படையும் இங்கு இருந்தது.பதிமூன்றாம் நூற்றாண்டு-பதினெழாம் நூற்றாண்டு வரை மண்கோட்டையாக ஐம்பது ஏக்கர் பரப்புடையதாக இருந்து இருக்கிறது.பின்னர் பதினெழாம் நூற்றாண்டில் நாகம கூளப்ப நாயக்கர் என்பவர் நக்கலூத்து குரும்பபட்டி குளம் வெட்டபட்டபோது கிடைத்த கற்களை கொண்டு புதிய கற்கோட்டையை போட்டு வைத்தார்.இந்த கற்கோட்டை ஆங்கிலேயேருக்கு சவாலாக இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.இது மதுரையில் இருந்து கொடைக்கானால் செல்லும் வழியில் 42கி.மீ தூரத்தில் உள்ளது.**

**இந்த அரண்மனைக்கோட்டை இருபத்தி ஆறு ஏக்கர் பரப்பு கொண்டவை.கூளப்ப நாயக்கர் கோட்டை என்பது முழுவதும் அரண்மனை கட்டிடங்கள்,நந்தவனங்கள் ஆயுதக்கிடங்கு,அரச அலுவலங்கள், கொண்ட தனிப்பட்ட கோட்டையாகும்.கோட்டையில் வீரர்கள் கோட்டையில் தங்கி இருந்து காவல் செய்ய 17 கொத்தளங்கள் உண்டு.அலங்கங்கள் என்று அழைக்கபட்டவை உள்ளே வீரர்கள் இருப்பது வெளி ஆட்களுக்கு தெரியாது போன்ற அறைகள் கொண்ட கோட்டை பகுதியாகும்.ஆனால் வெளிஆட்களை துப்பாக்கி முதலான ஆயுதங்களை கொண்டு தாக்கும் வண்ணம் அமைக்கபட்டு இருந்தது.கோட்டைச்சுவர் ஒவ்வொன்றும் பதினான்கு அடி அகலமும் முப்பது அடி உயரமும் கொண்டு இரட்டை கல் அமைப்பு கொண்டு நடுவில் அகழி தோண்டும் போது ஏற்பட்ட மண்ணை நடுவில் கொட்டி வைத்து இருப்பர்.எந்த பீரங்கியும் எளிதாக தாக்கிவிட முடியாத அமைப்பு. மதுரையில் இருந்த 72 பாளையங்களில் நான்கில் ஒரு பங்கு 18 பாளையங்கள் திண்டுக்கலில் இருந்தன.**

**வெள்ளைக்காரன் நிலக்கோட்டையயை சொல்லும் போது திண்டுக்கல் கோட்டைகளில் நிலக்கோட்டை மிகவும் பலமான கோட்டை என குறிப்பிடுகிறான்.அவன் பலமுறை முயன்றும் சிறு பகுதியை மட்டுமே இடிக்க முடிந்தது.அகழி ஒவ்வொன்றும் இருநூறு அடிக்கு மேலே அகலம் இருக்கும் அகழிக்கும் கோட்டை வாயிலை இணைக்க பாலம். தேவையில்லாத போது எடுத்துக்கொள்வர்.கோட்டையின் வாயில் ,அரை நீள்வட்ட வளைவு கொண்ட நுழைவு வாயில் கொண்டது.கோட்டை கதவுகளை தாழிட(பூட்டு அமைப்பு) இரு புறமும் துளையிடப்பட்ட கற்தூண்களை பயன்படுத்தினர்.கோணல் கோட்டை நுழைவு வாயில் அழைக்கபட்ட கோட்டை வாயில் ஒரு "ட" அமைப்பைக் கொண்டவை.இக்கோட்டை கூளப்ப நாயக்கருக்கு பாத்தியப்பட்டது என்று வெள்ளைக்காரன்களால் அறிவிக்கபட்டு**

**அரண்மனை குடும்பங்கள் அனுபவித்து வந்தனர்.அவர்களுக்குள் தாவா ஏற்பட்டு இந்தக் கோட்டை முழுக்க முழுக்க அரண்மனை குடும்பங்கள் சொத்து தீர்ப்பு மற்றும் தீர்ப்பாணைகள் பிறப்பிக்கபட்டன.**

**கோட்டையின் வாயில்**



## 22.பாளையக்கார காவல்..

**பாளையக்காரர்கள் இராணுவம் வைத்திருந்து பேரரசை காப்பாற்றினர்.ஊர்களை கொள்ளைகளில் இருந்து காப்பாற்ற காவல் என்ற முறையை கிராமங்களில் நடைமுறைபடுத்தி இருந்தனர்.ஒவ்வொரு கிராமமும் காவல்காரர்களை கொண்டு பாதுகப்பட்டது.இது ஸ்தல காவல் என்பதாகும்.இதைத்தவிர அரசு காவலர்கள்,நாட்டு காவலர்கள்,திசைகாவலர்களும் இருந்தனர்.குடியிருப்போரின் தானியங்கள்,கால்நடைகள்,நீர் நிலைகள்,சாலைகளை,பொது இடங்கள்,அங்காடிகள் போன்றவற்றை காவல்காரர்கள் பாதுகாத்தனர்.கொள்ளை நடந்தால் அந்த பொருட்களை மீட்டு கொடுப்பது காவல்காரர்களின் கடமையாகும்.மீட்க தவறினால் இழப்பை ஈடு செய்ய வேண்டும் ஸ்தலம் காவல் என்ற கூலி பணமாகவோ ,தானியமாகவோ அவர்களுக்கு கொடுக்கபட்டது.காவல்காரர்களாக கள்ளர் மற்றும் மறவர்கள், பாளையக்காரர்களால் நியமிக்கபட்டனர்.நிலக்கோட்டை பாளையத்தில் அனைத்து கிராமங்களுக்கும் காவல்காரர்கள் கூளப்ப நாயக்கரால் நியமிக்கபட்டனர்.விஸ்வநாத நாயக்கர் ,கூளப்ப நாயக்கரிடம் வத்தலக்குண்டு,ஆத்தூர் மண்ணாடிமங்களம் போன்ற கிராமங்களில் காவல்காரர்களை நியமிக்க சிறப்பான அதிகாரம் கொடுத்து இருந்தார்.**

## 22A மதுரை சந்திர சேகர பாண்டியன்.

**சுல்தான்க்கு(1365-66) எதிரான சண்டையில் வல்லக்கவார் குலத்தில் பெஞ்சை மாக்கிய நாயக்கர் தன் குலத்தில் பாதி குலத்தை பலி கொடுத்து சண்டையில் வெற்றி பெற்றார்.அதனால் நிலக்கோட்டை ஆள அதிகாரம் அளிக்கப்பட்டது.**

**மதுரை(1370) விஜய நகர அரசின் கீழ் வந்தாலும் மதுரையை ஆண்ட பாண்டிய மன்னர்களின் வாரிசுகளுக்கு சிறப்பான அந்தஸ்து கொடுக்கப்பட்டு பாளையங்கள் போன்ற பெரிய பிரதேசங்களை ஆள அதிகாரமும்.சில சமயங்களில் மதுரைக்கே அதிபதியாக இருந்துருக்கின்றனர்.**

**சுமார் கி.பி 1510 இருக்கும் மதுரையை சந்திர சேகர பாண்டியன் விஜய நகர பேரரசுக்கு கீழ் ஆட்சி செய்துகொண்டிருந்தார்.அப்பொழுது தன் வைப்பாட்டி**

**மகன்கள் பஞ்ச பாண்டியர்கள் மீது இருந்த கண்மூடிதனமான பாசத்தினால் நிலக்கோட்டை பாளையத்தினையயும் அருகில் இருந்த தொட்டியம் கோட்டை பாளையத்தையும் தன் வைப்பாட்டி மகன்கள் ஆள வேண்டும் என்று ஆசைபட்டார். அச் சமயம் திருடர்களின் சொர்க்க பூமியாக நிலக்கோட்டை வத்திலகுண்டு பகுதிகள் விளங்கின. அப்பொழுது நிலக்கோட்டை பட்டம் கூளப்பநாயக்கர் சிறுபிள்ளை நீ மதுரை வந்துவிடு .திருட்டு வழிப்பறி இல்லாமல் நானே பார்த்து கொள்கிறேன் என்று அழைத்தார் பாண்டியன்.சிறு பிள்ளை கூளப்ப நாயக்கரும் மதுரை சென்றுவிட்டார்.**

**இதற்கிடையில் வீர சேகர சோழன் பாண்டிய நாட்டின் மீது போர் தொடுத்து மதுரையை கைப்பற்றிக் கொண்டார். பாண்டியன் தோற்று விஜய நகர ராயர் சமஸ்தானத்துக்கு போனார்.கூளப்ப நாயக்கரும் கூடவே போனார்.கொட்டியம் நாகம நாயக்கரை மதுரை பாண்டியனுக்கு பட்டம் கட்டி வர சொல்லி படையை அனுப்பினார் ராயர்.அவரோடு நிலக்கோட்டை கூளப்ப நாயக்கரும் தன் படையோடு கலந்து கொண்டார்.**

**நாகம நாயக்கருக்கு வல்லக்கவார் வம்சத்திற்கும் ஒரு நல்ல தொடர்பு நெடுங்காலமாகவே இருந்து வந்தது நாகம நாயக்கர் படையில் கூளப்ப நாயக்கரின் சொந்தங்கள் வேலை பார்த்து வந்தனர்.ஏனெனில் விஜய நகர பேரரரசு நிலைத்து நிற்க கொல்லாக்கள் இழந்த உயிர்கள் ஏராளம்.**

**சோழனுக்கு எதிரான போரில் நாகம நாயக்கர் வெற்றி பெற்றார்.நாகம நாயக்கரிடம் நிலக்கோட்டை ;தொட்டியம் கோட்டை மற்றும் சில பாளையக்காரர்களின் பாளையத்தை மறைத்து இது தன் வைப்பாட்டி மகன்கள் ஆட்சி செய்த இடம் என எழுதிக் கொடுத்தான் பாண்டியன்.**

**பாண்டியனுக்கு இனி பட்டம் கட்டினால் இந்த பாண்டிய தேசத்துக்காக கொல்லாக்கள் செய்த உயிர் தியாகம் ஒன்றும் இல்லாமல் போய்விடும் என நினைத்து மதுரைக்கு தானே முடிசூட்டி கொள்கிறார்.பாண்டியன் ராயருக்கு ஓலைஅனுப்பினார்.தாங்கள் அனுப்பி எனக்கு பட்டம் கட்டிவர சொன்ன நாகம நாயக்கர் தானே பட்டம் கட்டி கொண்டார் என்று.ராயருக்கு கோபம் நாகம நாயக்கரின் மேல்.**

**நாகம நாயக்கருக்கோ விஜய நகர பேரரசுக்கு கம்பள மக்கள்,கொல்லா மக்கள் செய்த உயிர் தியாகத்திற்கு மதுரை என்ன விஜய நகர பேரரசையே ஆள உரிமை கொடுக்கலாம் என்று.ராயருக்கு தெரியும் நாகம நாயக்கரை விஜய நகர மொத்த படையும் போய் எளிதாக ஜெயித்து வர முடியாது.யோசித்தார் ராயர் அனைவரையும் கேட்டு பார்த்தார் அனைவரும் முடியவே முடியாது என்று மறுத்துவிட்டனர்.**

**நாகம நாயக்கர் மகன் விஸ்வநாத நாயக்கர் தன் தந்தையை கைது செய்ய செல்வதாக கூறினார்.ராயருக்கு சந்தோசம்.விஸ்வநாதனுக்கோ (கம்பள -கொல்லா) செஞ்சோற்று கடன் தீர்க்க தன் தந்தையை கைது செய்ய சென்றான்.பல தளபதிகளை அனுப்பினார் விஸ்வநாத நாயக்கர் நாகம நாயக்கரிடம் சரண் அடைய வேண்டும் என்று.**

**நாகம நாயக்கனோ வேறு வழி இல்லாமல் சரணடைந்தார்.நாகம நாயக்கருக்கு தண்டனை வழங்கினார் ராயர்.தன் வாளை உருவி தன் தந்தை தலையை வெட்ட போனான் விஸ்வநாத நாயக்கன்.பல ராஜ கம்பள பாளையக்கார்களின் முன்னோர்கள்.தன் தலைகளையும் சேர்த்து எடுக்குமாறு தன் இன நாகம நாயக்கர் துணையாய் நின்றனர்.ராயர் வேறு வழி இல்லாமல் நாகம நாயக்கரை விடுவித்தார்.**

**விஸ்வநாத நாயனுக்கு மதுரை அரசராக பட்டம் கட்டினார்.எழுபத்திரெண்டு பாளையத்தில் ராஜ கம்பள தொட்டிய நாயக்கர்களுக்கு நிறைய பாளையங்கள் கொடுக்கபட்டது.நிலக்கோட்டை பாளையமும் தொட்டியங்கோட்டை பாளையமும் திருப்பி கொடுக்கபட்டன.**

## ***23.***கயத்தாறு போர்

*<u>விஸ்வநாத நாயக்கருக்காக கயத்தாறு போரில் நிலக்கோட்டை கூளப்ப நாயக்கர்:</u>*

விஸ்வநாத நாயக்கர் பாளையம் பிரிக்கும் போது திருநெல்வேலியில் ஐந்து பாளையங்கள் பாண்டியனின் வைப்பாட்டி மகன்களுக்கு கொடுக்கபட்டது.இவர்கள் பஞ்ச பாண்டியர்கள் என அழைக்கபட்டனர். ராயர் விஸ்வநாதனை மதுரைக்கு அரசராக்கிறார்..விஸ்வநாதன் 72 பாளையங்களை உருவாக்குகிறான்.விஸ்வ நாதன் வல்ல நாட்டை தஞ்சாவூருக்கு கொடுத்துவிட்டு திருச்சியை மதுரையோடு இணைக்கிறான்.

வீரபாண்டியன் வாரிசுகள் ஐந்து பாண்டியர்களுக்கு திருநெல்வேலியில் (கயத்தாறு) ஐந்து பாளையங்களை கொடுக்கிறான்..அரியாத நாத முதலியார் வரி வசூல் செய்ய

போனபோது வரிகொடுக்காமல் சண்டை செய்ய அழைக்கிறார்கள்..பின்னாளில் சில பாளையக்காரர்களின் படையொடு விஸ்வநாதன் கயத்தாறு செல்கிறான்..இந்த போரில் நிலக்கோட்டை கூளப்ப நாயக்கரும் கல்ந்து கொள்கிறார். தன் வீரத்தை காண்பித்தார் .சண்டை ஆறு மாதம் வரை நடக்கிறது முடிவு எட்டப்பபடவில்லை.ஆறு மாத சண்டை என்பதால் வீரர்கள் மட்டும் அல்ல திருநெல்வேலி சீமை மக்களும் உணவு தட்டுபாட்டால் பசியால் இறந்தனர்.

விஸ்வநாத நாயக்கர் மனம் இறங்கி மக்கள் ஏன் கஷ்டபடணும் நினைக்கிறார்..அதற்காக ஒரு ஒப்பந்தம் போடப்படுகிறது. மன்னர்களுக்குள் மட்டும் போர் புரிவது என்று.விஸ்வநாதன் ஜெயித்தால், தான் அணைந்திருக்கும் எல்லாவற்றையும் மற்றும் நாட்டை விட்டுவிட்டு பஞ்சபாண்டியர்கள் ஓட வேண்டியது..பஞ்ச பாண்டியர்கள் ஜெயித்தால் விஸ்வநாதன் நாட்டைவிட்டு விட்டு ஒடிட வேண்டியது..ஐந்து பேரும் ஒரே நேரத்தில் தன்னிடம் மோதலாம் தனக்கு மறுப்பு இல்லை என்றான் ஏனெனில் நீங்கள் ஐந்து நாடு கேட்கிறீர்கள் ஐந்து பேரும் வரலாம் என்றான்.. ஐந்து பாண்டியர்களும் கலந்து பேசி தங்களுக்குள் ஒரு பலசாளியை அனுப்பினர்.சண்டையில் முதலில் பாண்டியனை வெட்ட சொல்கிறான்..விஸ்வநாதன் அதை தடுத்து விடுகிறான்..பாண்டியன் விஸ்வநாதனை வெட்ட சொல்கிறான்..இல்லை இல்லை முடிந்தால் மூன்று வாய்ப்பு தருகிறேன் முடிந்தால் என்னை வெட்டி கொன்றுவிடு என்கிறான்..மூன்று முறையையும் தடுத்து விடுகிறான்..இப்பொழுது என் முறை முடிந்தால் உன்னை காப்பாற்றி கொள் என சொல்லி பாண்டியனை இரு துண்டுகளாக வெட்டி கொன்றுவிட்டான்.இதில் வீரத்தை காட்டிய நிலக்கோட்டை கூளப்ப நாயக்கருக்கு பொன்னும் பொருளும் ராஜ்ஜியங்களும் கொடுக்கபட்டன.

## 24 *கண்டிப்போர்*

கி.பி 1552 இல் அரியணை ஏறினார் கிருஷ்ணப்ப நாயக்கர்.இவருக்கும் நிலக்கோட்டை கூளப்ப நாயக்கருக்கும் நல்ல உறவு இருந்தது.தும்பச்சி பாளையக்காரர்க்கு தனக்கு கொடுத்த பாளையத்தின் பரப்பு மிகக் குறைவு என மனதுக்குள் வைத்துக்கொண்டு விஸ்வாத நாயக்கர் இருக்கும் வரை மதுரையை எதிர்க்க துணியவில்லை.கிருஷ்ணப்ப நாயக்கர் பட்டம் ஏற்றவுடன் மற்றும் முப்பதுக்கும் மேற்பட்ட பாளையக்காரர்கள் ஆந்திரா சென்று சுல்தானை துவம்சம் செய்த சமயம் பார்த்து மதுரையில் கலகம் செய்ய ஆரம்பித்து விட்டார்.தும்பச்சி நாயக்கர் பரமக்குடி கோட்டையும் கைப்பற்றி

கொண்டான். அவனை அடக்க கூளப்ப நாயக்கருடன் சேவப்ப(கேசவ) நாயக்கர் சென்றார் .

கூளப்ப நாயக்கர் மற்றும் சேவப்பா ஆணையிட்டனர் தும்பச்சி நாயக்கர் அடிபணிய வேண்டும் என்று.கேட்கவில்லை அவர்.கோட்டைக்குள் இருந்து தீடிரென வெளியேறி துப்பாக்கியால் சுட்டதில் கோட்டைக்கு அருகில் இருந்த சேவப்பா மாய்ந்து போனோர்..கூளப்ப நாயக்கர் உடலை மதுரைக்கு அனுப்பிவிட்டு .மீண்டும் போருக்கு தயாரானார்.இப்பொழுது சேவப்பாவின் மகன் சின்ன சேவப்பா தளபதியாக பொறுப்பெற்றுக் கொண்டார்.

தும்பச்சி நாயக்கனின் தலையை துண்டாக்கினார் கூளப்ப நாயக்கர்.மிரண்டு போனானன் தும்பச்சி நாயக்கனின் நண்பன் இலங்கை கண்டி அரசன்.இவன் தான் தும்பச்சிக்கு பணம் கொடுத்து பரங்கியர்களுடன் மதுரையை எதிர்க்க சொன்னவன். பரமக்குடிகோட்டை பரங்கியர்களுடன் பிடிப்பட்டதை தொடர்ந்து பதினைந்தாம் நாள் இரவு இலங்கை செல்ல முடிவெடுத்தது மதுரைப்படை.

(தேவிப்பட்டினம்) மதுரைப்படைபோர்த்துகீசிய கப்பல் மும்மடங்கு இலாபத்துடன் வாடகைக்கு அமர்த்துபட்டது..மதுரையில் குறைந்த எண்ணிக்கையில் 60000 வீரர்களும் ஆயிரம் குதிரைகள் மட்டுமே வந்தன.ஏனெனில் இலங்கையில் குதிரைகள் மிகக்குறைவு.கப்பல்களிலும் தோணிகளிலும் குதிரைகள் போர் தளவாடங்கள் உணவுப் பொருட்கள் ஏற்றப்பட்டன..வல்லங்களிலும் பாய்மரத்திலும் வீரர்கள் ஏறிசென்றனர்.கண்டி அரசன் நாற்பதாயிரம் வீரர்கள் பரங்கியரோடு காத்திருந்தான்.போர் தொடங்கும் முதல் நாள் காலையில் கூளப்ப நாயக்கர் மரத்தில் ஏறி பார்த்தார்.சிரித்து கொண்டே கீழே இறங்கினார்.முதல் பார்வையிலே யுத்த அனுபவம் சிங்கள படைக்கு சிறிதும் இல்லை என்பதை தெரிந்து கொண்டார்.

போர் ஆரம்பித்தது.போரில் சிறந்த துருக்கியரயோடு போரிட்டு போரிட்டு ஜெயித்த இராஜகம்பள வல்லக்கவார் நாயக்கர்கள் சிங்களனை மூன்று மணிநேரத்தில் ஊதித்தள்ளினர்.மரங்களுக்கு பின் மற்றும் கேடயங்களுக்கு பின்னால் மறைந்து மறைந்து பரங்கியரின் துப்பாக்கி சூட்டை சின்னாபின்னாமாக்கினர்.

பரந்தலை மட்டுமின்றி கண்டியிலும் சிங்களப்படை தோற்கடிக்கபட்டது.கண்டி அரசன் கொல்லபட்டான்.நாயக்கர் அரசு பொறுப்பேற்றது இலங்கையில்.இலங்கையில் மூன்றாவது வெற்றி.இரண்டு முறை விஜய நகரப்படை.மூன்றாவது முறை

மதுரைப்படை மட்டுமே தனியாக இலங்கை சென்று வீரத்தை வெளிகாட்டியது.விஜய நகரத்தில் இருந்து போரை முடித்துவிட்டுமுப்பதுக்கு மேற்பட்ட பாளையக்கார்ளோடு வந்த அரியாத முதலியார் அசந்தே போய்விட்டார்.

கூளப்ப நாயக்கரின் ஆசை தனக்கு வயது நூறு ஆனாலும் போர்களத்தில் சென்று உயிர் விட வேண்டும் என்று.ஏனென்றால் பல போர்களை கண்ட வீரன் இந்த நிலக்கோட்டை பாளையக்காரன் வல்லக்கவார் கூளப்ப நாயக்கர்.




## 25. நிலக்கோட்டை அரண்மனை:-

**விஜய நகர பேரரசின் கட்டுப்பாட்டில் நேரடியாக (மதுரை மண்டலம் பாண்டியர்களால் ஆளப்பட்ட போது அதாவது விஸ்வநாத நாயக்கருக்கு முன்)நிலக்கோட்டை ஆளப்பட்டபோது நிலக்கோட்டை மண்கோட்டையாலும் அரண்மனை மரத்தால் முழுவதும் செய்யப்பட்டதாகவும் இருந்தது.பின்னர் விறலிவிடு தூது நாகம கூளப்ப**

**நாயக்கர் காலத்தில்(மதுரை நாயக்க மன்னரால் ஆளப்பட்டபோது) நிலக்கோட்டை கற்கோட்டையாகவும் அரண்மனை செங்கற்கலாலும் கட்டப்பட்டது(மேல உள்ள புகைப்படத்தில் உள்ளது).ஐம்பது அடி நீளமும் ஐம்பது அகலமும் கொண்ட இந்த அரண்மனையில்முதலில் நாம் பார்ப்பது வராண்டா (தாழ்வாரம்) பர்மா தேக்கு மரத்தால் செய்யப்ட்ட யாழி சிற்பத்தோடு கூடிய அழகிய தூண்கள் நம்மை வரவேற்கும்.அங்கே இரண்டு பத்துக்கு பத்து அடி நீள அகலங்களை உடைய எதிர் எதிர் அமைந்த அழகிய வேலைப்பாடுகளுடன் பர்மா தேக்கு மர கதவுகளுடன் கொண்ட அறைகள் வரவேற்கும்.அடுத்து இரண்டு பத்துக்கு பத்து அறைகள் கொண்ட ஒரு ஹால்.அடுத்தும் இதைப்போன்று பத்துக் பத்து அறைகள் கொண்ட ஹால்.அடுத்து ஊஞ்சாலாடும் மண்டபத்துடன் கூடிய மைய மண்டபம்.அடுத்து பத்துக்கு பத்து அறைகள் எதிர் எதிர் வாயில் இல்லாமல் இருக்கும் அந்தப்புற அறைகள்.**

**முதல் மாடி அமைப்பு:-**

**முதலில் பால்கனி அதன் பிறகு எதிர் எதிர் பத்துக்கு பத்துக்கு நீளம் அகலம் கொண்ட அறை கொண்ஹாலுடன் உடைய நான்கு அறைகள்.இந்த நான்கு அறைகள் கொண்ட அமைப்பிற்கு முன்னும் பின்னும் வராண்டா.**



**இரண்டாம் மாடி:**




**அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய மொட்டைமாடி இங்கிருந்து நாம் நிலக்கோட்டை நகரை ரசிக்க முடியும் நிலக்கோட்டை அரண்மனை உயரத்துக்கு பெயர் போனது.அனைத்து பர்மா தேக்கால் நுணுக்கமான வேலைப்பாடுகள் செய்யப்பட்ட கிளி கூடு ஜன்னல்மற்றும் கீரிட ஜன்னல் மற்றும் கதவுகள்.அரண்மனையில் மொத்தம் பதினான்கு அறைகள் கொண்டவையாக கட்டப்பட்டு இருக்கிறது.விறலி விடுதூது நாகம நாயக்கர் முன் இருந்த அரண்மனை மரத்தால் செய்யப்பட்ட ஒரு ஏக்கர் பரப்பு கொண்ட அரண்மனை.**

## **26.**கைவிடப்பட்ட நிலக்கோட்டை ராஜா காலத்து தானியக் களஞ்சியம்:-



முன்பு ஒரு காலத்தில்,ஊழியமாக தானியங்களை பெற்றோர் எத்தனை பேரோ?

தானமாக தானியங்களை பெற்றோர் எத்தனை பேரோ?

எத்தனை மன்னர்கள் படையெடுத்து கைப்பற்ற நினைத்தது எத்தனை பேரோ?

கொள்ளையடிக்க நினைத்தது எத்தனை பேரோ?

கோட்டை முற்றுகையிடப்பட்டபோது எத்தனை மாதங்கள் எத்தனை வீரர்களுக்கு உணவு தேவை பூர்த்தி செய்ததோ?...

எத்தனை காளை வண்டிகள் எத்தனை மூட்டைகளுடன் இதன் முன் நின்றனவோ?

எத்தனை குதிரைகளுக்**கு** எத்தனை யானைகளுக்கு,எத்தனை ஒட்டகத்திற்கு உணவளித்தோ?கண் முன்னே வந்து செல்லும் கைவிடப்பட்ட நிலக்கோட்டை ராஜா காலத்து தானியக்களஞ்சியம்.

## 27சித்திரமாடம் (சிற்ப மாடம்)




**பண்டைய கால மன்னர்கள் தங்களுடைய அரண்மனையில் சித்திரமாடம் என்ற பகுதியை நிறுவி இருப்பார்கள்.சித்திரமாடம் என்பது ஒரு தற்காப்பு உத்தியாகும். அங்கு இடம் பெறும் சித்திரங்கள் வெளியார் அறியாத வாயில்களாகவே அமையும் தன்மை உடையது. அண்டை நாட்டார் தாக்குதலின்போது ஆள்வோர் உயிர்தப்பி பிழைப்பதற்கு உண்டாக்கப்பட்டது. சித்திரமாடம் கலைநுட்பத்துடன் திகழ்கிறது. திண்டுக்கல் மாவட்டம் நிலக்கோட்டையில் உள்ள கூளப்ப நாயக்கர் அரண்மனையில் இன்றும் சித்திரமாடம் உள்ளது.**

**சித்தன்ன வாசல் சுதை ஓவியம்**

**அஜந்தா பௌத்தர் உடைய தலம், சித்தன்ன வாசல் சமணர் தலம், பெருவுடையார் கோயில் இந்துவுடைய தலம் ஆகும். கி.மு.1750 ஆம் ஆண்டு கிரிட் தீவில் சுதை ஓவியக்கலையை கலைஞர்கள் அறிந்திருக்கின்றனர். கிரீட், பாரசீகம், அஜந்தா மற்றும் தமிழகத்தின் சித்தன்னவாசல், தஞ்சை பெரியகோயில், இலங்கை சிகிரியா இவையெல்லாம் அஜந்தாவின் வழிவந்தவை.பலரும் சுதை ஓவியங்கள் என சித்தன்ன வாசல் ஒவியத்தை குறிப்பிடுகிறார்கள். இவ்வகை ஓவியங்கள் தளம் சமன்படுத்தப்பட்டு ஈரம் உலரா முன்பு ஈரத்தின் மீதே படம் தீட்டுவதாம். அஜந்தா ஒவியம் தளம் உலர்ந்த பிறகு தீட்டப்பட்டவை.**

**சித்திரக்கார தெரு**

**மதுரையில் கீழ மாசி வீதிக்குப் பக்கத்தில் தேர் முட்டி இருக்கும் இடத்தின் கீழ்புறம் செல்லும் சந்தின்; வழியாக சென்றால் சித்திரக்காரத்தெருவை காணலாம்.பொதுவாக மதுரை நகர மக்களுக்கு சித்திரம் எழுதுவது, சித்திரங்கள் வரையது, சித்திரங்களை ரசிப்பது என்பது குருதியுடன் கலந்த பண்பாட்டு அம்சமாகும். மதுரையில் சித்திரமாடம் என்ற அரண்மனை ஒன்றிலிருந்து அழிந்து போயிருக்கிறது.**

**நிலக்கோட்டை கூளப்ப நாயக்கர் அரண்மனையில் சித்திரமாடம் இன்றும் உள்ளது.கடைச்சங்க காலத்தில் பாண்டிய மன்னன் ஒருவன் நன்றாமன் என்ற பெயருடன் வாழ்ந்து வந்தான். இவனுக்கு சித்திரமாடத்தில் துஞ்சிய நன்மாறன் என்ற பட்டப்பெயரும் உண்டு. அதாவது சித்திரங்கள் வரைந்து அழகு செய்யப்பட்ட அரண்மனை ஒன்றில் இறந்து போனான் என்பது பொருள். மதுரையில் வாழ்ந்த சித்திரம் தீட்டுபவர்களை சங்க இலக்கியத்தின் மதுரைக்காஞ்சியில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கிற்கண்ணுள் வினைஞரும்என்கிறது.எதையும் தன்னுடைய கண்களால் நோக்கி வரைந்து பிறருடைய கண்ணுக்கும் விருந்தாக்குவதால் கண்ணுள் வினைஞர் என்கிறது மதுரைக்காஞ்சி.இத்தகைய ஓவியத் தொழில் வல்லுநர்களான சித்திரக்காரர்கள் ஒருங்கே வளர்ந்த பகுதிதான் சித்திரக்காரத்தெரு.மேலும் மதுரையில் நாயக்க மன்னர்களின் காலத்தில் பலிஜா மற்றும் கவுரா நாயுடு என இரண்டு பிரிவினர் இருந்தனர். இவர்கள் ஓவியம் வரைவதில் நிபுணர்கள். இந்த ஓவியர்களான சித்திரக்காரர்கள் ஒன்றாக குடியேறி மதுரையில் கிழக்குப்பகுதியில் வாழ்ந்தனர்.**

**மன்னர் திருமலைநாயக்கர் அரண்மனைக்குப் பக்கத்தில் மன்னர் குடியமர்த்தினார். இதனால் சித்திரக்காரத்தெரு எனப் பெயர் பெற்றது**,

## *28.சேதுபதி போர்*

*தண்டு(தண்ட) கூளப்ப நாயக்கர்*:-

தண்ட நாயக்கர் என்ற பதவி பத்தாம் நூற்றாண்டில் இருந்து வந்ததை நாம் பார்த்து வருகிறோம்.தண்ட நாயக்கர் என்றால் போர்ப்படைக்கு தலைவன் என்பதாகும்.சேது நாட்டில் நல்லாட்சி நிலவ அடைக்கலம் தேடிவந்த சடைக்க தேவனின் தம்பி சோரபுத்திரனுக்காக சேதுநாட்டின் மீது மன்னர் திருமலை நாயக்கர் படையெடுத்தார்.எழுபத்தி இரண்டு பாளையக்காரர்களும் இந்த காலக்கட்டத்தில் சிற்றரசு போல இருந்தனர்.இராமப்பையன் தலைமை தாங்கினான்.மொத்தம் அறுபத்தி நான்கு நாள் நடந்த போரில் வன்னியத்தேவன் மறவத் தளபதி கொல்லப்பட்டார்.

இராமேஷ்வரம் தப்பியோடிய சடைக்க சேதுபதியை பிடிக்க பாலம் கட்டப்பட்டது.திண்டுக்கல் மண்டல பாளையக்காரர்கள் பாலம் கட்டி சேதுபதியை பிடிக்க முற்பட்டனர்.நிலக்கோட்டையின் கூளப்ப நாயக்கரின் பெரும் படை அவ்வேளையை முடித்து வைத்தது.சேதுபதி கைது செய்யபட்டு விடுவிக்கபட்டார்.இதற்காக மன்னர் திருமலை நாயக்கர் **52** கூளப்ப நாயக்கருக்கு திண்டுக்கல் மண்டல தண்ட நாயக்கராக(மண்டல போர்படைத் தளபதி) பொறுப்பு கொடுக்கபட்டது. இந்த தண்ட கூளப்ப நாயக்கர் ஆத்தூர் கிராமம் சீவல்சருகில் நரசிம்ம பெருமாளும்..நிலக்கோட்டை சீத்தாபுரத்தில் குளம் வெட்டினார், சீத்தாபுரத்தில் பெருமாள் கோவிலும் கட்டி வைத்தார்..

விஜய நகர பழமொழி:-

விஜய நகர படை, தண்டு இறங்கி கூடாரம் போட்டுவிட்டார்கள் என தெரிந்தால் எதிரிக்கு குலையும்(ஈரல்) நடுங்கிவிடுமாம்.

## 29.**மைசூர்** *போர்*

**விஸ்வ நாதனும்,அவர் தகப்பனார் நாகமருடனும் படையில் பணிபுரிந்து திண்டுக்கல் மதுர புரிக்கு அருகில் கோட்டை போட்டு ஆட்சி செய்ய வந்தவர் மாக்கிய நாயக்கர்.**

**நாகம நாயக்கர் பாண்டியருக்கு உதவியாக சோழர் மீது படையெடுப்புக்கு உதவியால் இவர்களுக்கு (வல்லக்க ராயர்)நாகமர் நிலங்களை அள்ளி வழங்கினார்.**

**விஸ்வநாத நாயக்கர் மதுரை பாண்டிய நாட்டுக்கு முடி சூட்டிய பின்னர் இவர்களுக்கு மதுரைக்கோட்டை கொத்தள காவல் வழங்கப்பட்டது.கொத்தள காவலோடு, எல்லைக்காவல் பொறுப்பும் இவர்களுக்கு வழங்கப்பட்டது.எடுத்துக்காட்டிற்கு நிலக்கோட்டை கூளப்ப நாயக்கருக்கு பனிரெண்டு கொத்தளம் கொண்ட வத்தலக்குண்டு கோட்டைக்கு காவல் உரிமையும்,இதைப்போல ஆத்தூர் கோட்டை, மண்ணாடி மங்கல கோட்டை காவல் பொறுப்பு கொடுக்கபட்டது.கன்னிவாடி பாளையக்காரர்க்கு திண்டுக்கல் கோட்டை காவல் உரிமை கோட்டையாகும். ஒருமுறை விஜய நகர் பலம் குன்றியதும்,மைசூர் அரசர் தன்னை விஜய நகரிலிருந்து விடுவித்துக்கொண்டு சுதந்திர அரசாக அறிவித்தார்.மதுரை மீது முகிலன் தலைமையில் படையெடுத்து வந்தது மைசூர் அரசு.அப்பொழுது மதுரையில் இரட்டையாட்சி முறை இருந்தது மதுரைக்கு முத்து வீரப்பனும்,திருச்சியில் தம்பி திருமலை நாயக்கரும் ஆட்சியில் இருந்தனர்.முகிலன் படையெடுப்பை திருமலை நாயக்கரிடம்,முத்து வீரப்பனிடம் அனுமதி பெறாமல் கன்னிவாடி ரங்கண்ண நாயக்கர் திண்டுக்கல் மண்டல பதினெட்டு பாளையக்காரர் உதவியுடன் முறியடித்தார்.எல்லாவற்றிற்கும் மேலாக மைசூர் படைகளின் குதிரைகள் பிடுங்கப்பட்டன. இரவோடு இரவாக போர், திக்கு திசை தெரியாமல் மாட்டிக்கொண்டோம் என்பதை நினைத்து திடுக்கிட்டு போனான் முகிலன்.போரில் தோற்று கால்வாசி பேர்கள் மட்டுமே மைசூர் திரும்பினர்.மீதிப்பேர் சத்திய மங்கலம், பாவானி ஆற்றின் மணலிலே மாண்டனர்.இதை பற்றி அறிந்த மன்னன் வல்லக்க ராயன் நடுகட்டளை(குத்திலுப்பை) ரங்கண்ண நாயக்கருக்கு சின்ன மைசூரியன் என்ற பட்டமும் வல்லக்க ராயன் விருப்பாட்சி கோபால சிந்தம நாயக்கருக்கு பாதைக்காவல் பட்டமும் சபையில் வழங்கி கௌரவித்தார்.** இதில் வீரத்தை காட்டிய நிலக்கோட்டை கூளப்ப நாயக்கருக்கு பொன்னும் பொருளும் கொடுக்கபட்டன.

## 30.மூக்கு அறுப்பு *போர்*

**விஜய நகர எர்றசை(இரசை) தொட்டிய கம்பள வல்லக்கவார் இரங்கண்ண நாயக்கர்:- (கன்னிவாடி நடுக்கட்டளை சின்னக்கதிரி நாயக்கரின் மகன்)**

விஜய நகர எர்றசை (இரசை) தொட்டிய கம்பள வல்லக்கவார் இரங்கண்ண நாயக்கர்:- (கன்னிவாடி நடுக்கட்டளை சின்னக்கதிரி நாயக்கரின் மகன்)|

மூக்கறுப்புப் போர் - பிஜப்பூர் சுல்தானுடன் சேர்ந்துகொண்டு தன்மீது படையெடுத்து, பெருந்துன்பத்தைத் தந்த திருமலை நாயக்கரை பழிவாங்கும் எண்ணம், மைசூர் அரசர் கந்திருவ நரச ராஜாவுக்குள் புகைந்துகொண்டே இருந்தது. அதைச் சும்மாவிட்டுவிட மனம் ஒப்பாமலிருந்தார். மைசூரிலிருந்து பிஜப்பூர் வீரர்கள் திரும்பிவிட்டது, அவருக்கு ஒரு சந்தர்ப்பத்தை வலிய வந்து கொடுத்தது.

அதை பயனுள்ளதாக்கிக் கொண்டு, மதுரை மீது வலிந்து சண்டைக்குப் போனார். 1656 ஆம்ஆண்டில் சத்தியமங்கலம் மாகாணத்துக்குள் ஊடுருவலை நடத்த உத்தரவிட்டார். அவரது படைகள் குடிமக்களிடம் அத்துமீறி நடந்து, பெருத்த அழிவை உண்டாக்கும் குற்றங்களை வகைதொகையில்லாமல் செய்தன.

சேலம் மாகாணத்திலிருந்த வளம்நிறைந்த சத்தியமங்கலம், திருமலை நாயக்கரின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதி என, 1652ஆம் ஆண்டின் 'எருமைப்பட்டிக் கல்வெட்டு* தெளிவுறச் சுட்டுகின்றது. 1655-56ஆம் ஆண்டின் கந்திருவ நரச ராஜாவின் ஈரோடு கல்வெட்டொன்று, அவரது தளபதி கெம்பையா மதுரையின் தொடர்பிலிருந்ததாகக் கூறுகின்றது.

அநேகமாக அது, மதுரை மீது படையெடுக்கும் பொறுப்பை கெம்பையாவிடம் கந்திருவ நரச ராஜா ஒப்படைத்தது தொடர்பானதாக இருக்கலாம்.

அரசரால் ஊக்குவிக்கப்பட்ட மைசூர் தளபதி, மதுரையைக் கைப்பற்றும் நோக்கில், அந்த ஊரை நெருங்கிவிட்டான். அப்படி அவன் போகுமிடமெல்லாம், தனது எஜமானனின் காட்டு மிராண்டித்தனமான உத்தரவை நிறைவேற்றிக்கொண்டே போனான். கையில் சிக்கியவர்கள் ஆணோ, பெண்ணோ, குழந்தைகளோ, பெரியவர்களோ யாராகயிருந்தாலும், அவர்களது மூக்கை அறுத்துவிடச்சொல்லி கந்திருவ நரச ராஜா உத்தரவிட் டிருந்தார். அறுபட்ட மூக்குகளை மைசூருக்கு அனுப்பியும் வைத்தான்.

காட்டுமிராண்டித்தனமான இந்தச்செய்கை, மைசூர் படையினரின் போர் செயல் பாட்டு முறைகளில் ஒன்றாக இருந்தது. எவாயேஜ் டு தி ஈஸ்ட் இந்தியா எனும்நூலை எழுதிய ஜே.எச். க்ரோஸ், 'மைசூர் படையினரின் தனித்துவமான செய்கையாக அது இருந்தது.

அவர்கள் மிகச்சாமர்த்தியமாகவும் எளிதாகவும் மூக்குகளை அறுத்து சேகரித்தனர்' என்கின்றார். செயிண்ட். ஜார்ஜ் கோட்டையின் 1679ஆம் ஆண்டின் ஜனவரி மாதத்திய

தீர்மானமொன்றில், மூக்கறுக்கும் செயல்பாடு குறித்த குறிப்பொன்றும் இடம்பெற்றுள்ளது. திருமலை நாயக்கர் உடல்நலம் குன்றி, படுத்தப் படுக்கையாக

இருந்தார். படையெடுப்பைத்தாண்டி, இயற்கையிலேயேஅவருக்குள் குழப்பம் மண்டிக்கிடந்தது. ஒருகட்டத்தில் தெளிவுபெற்ற அவர், தனது நம்பிக்கைக்குரிய ஆதரவாளரான ரகுநாத சேதுபதிக்கு தகவல் அனுப்பினார். உடனடியாக 25,000 மறவவீரர்களுடன் திரண்டுவந்து, மதுரையை ஆபத்திலிருந்து மீட்க வந்தார்.

அவருக்குத் துணையாக திருமலை நாயக்கரின் மற்ற ராஜ கம்பள படைகளைச் சேர்ந்த நிலக்கோட்டை கன்னிவாடி விருப்பாட்சி போன்ற வல்லக்கவார் படைகளை சேர்ந்த 35,000 வீரர்கள் இருந்தனர்.வல்லக்கவார் பாளையமான அம்மைய நாயக்கனூரில் மிகப்பெரிய சண்டை நடந்தது. பிணக்குவியல்கள் நிலத்தில் மிதந்து கிடந்தன. அந்த இடத்தில் பிணங்கள் கருவாடு போல் கிடந்ததால் கருவாட்டு பொட்டல் என பெயர் வந்தது.

மிகக்குறுகியகாலத்திலேயே மைசூர் படை திண்டுக்கல் எல்லையிலிருந்து விரட்டியடிக்கப்பட்டது. விரைந்து முடிவெடுப்பதில் சற்றே திணறிப்போன மைசூர் படைத் தளபதி கெம்பையா இறுதிமுடிவைபழமாக்க முடியாமல் தோற்றுப் போனான். இப்போரில் சிறப்பாக செயல்பட்ட. சேதுபதிக்கு திருமலை பட்டம் கொடுக்கப்பட்டது.

**மைசூர் மீது எதிர்த்தாக்குதலை மதுரை நடத்தியது குறித்தும் பேசப்படுகின்றது. வலியச்சென்று தாக்கும் அந்தப் படையெடுப்புக்கு தளபதியாக, தனது தம்பி குமாரமுத்து நாயக்கரை திருமலை நாயக்கர் நியமித்தார். அவருக்கு உதவியாக, திண்டுக்கல் மண்டல தலைவர் விஜய நகர எர்றசை தொட்டிய கம்பள வல்லக்கவார் ரங்கண்ண நாயக்கர் தலைமை ஏற்றார்.**

**மதுரைமீது மைசூர் படையெடுப்பு நடத்தியதற்கு பழிக்குப்பழியாக, அவர்கள் வெறிகொண்டு இயங்கினர். மைசூர் படையினர் தங்கள் தலைநகரைக் காப்பாற்றிக்கொள்ள வெகுவாகப் போராடினர். ஆயினும், பெருத்த சேதத்தைஅவர்கள் சந்தித்தனர். மதுரைமீது மைசூர் படையினரால் நடத்தப்பட்ட விசித்திரமான நடவடிக்கைகளை, மதுரைப் படை மைசூரில் திருப்பி நடத்தியது. இச்செய்கைகளால், 'மைசூர் அரசன் மூக்கை இழந்தான்'வர்ணிப்போரும் உண்டு.இந்த போரின் முடிவின் போது உடல் நலக் குறைவில் இருந்த மன்னர் திருமலை நாயக்கர் தெய்வாதீனம் அடைந்தார்.அவரது தம்பிதான் அடுத்த மன்னர் திருமலை நாயக்கர் சொல்லி**

**இருந்தார்.மதுரை அரண்மனையில் இருந்தவர்கள் திருமலை நாயக்கரின் மகன் இரண்டாம் முத்து வீரப்ப நாயக்கரை மன்னனாக தேர்ந்தெடுத்தனர்.இதையறிந்த தம்பி குமார முத்து மைசூரிலிருந்து வந்து அரண்மனைக்குள் போகவில்லை.பின்னர் கன்னிவாடி ரங்கண்ண நாயக்கர் இரு தரப்பினர்களுக்கும் இடையில் அமைதி பேச்சுவார்த்தை நடத்தினார்.பின்னர் தம்பி குமார முத்துக்கு சிவகாசியும்,திருநெல்வேலியில் சில பகுதிகளும் சுதந்திர அரசாக ஆட்சி செய்து கொள்ள கன்னிவாடி ரங்கண்ண நாயக்கரின் முடிவுக்கு அனைவரும் இசைந்தனர்.**

## 31. செப்பேடுகள்:-

திருமலை நாயக்கர்,-கூளப்ப நாயக்கர் பாளையமான சீவல் செருகிற்கும் வந்த போதும் அண்டை பாளையமான அம்மைய நாயக்கனூருக்கு வந்தபோது செப்பேடு தந்தார் அதில் ஒன்பதூர் கூளப்ப நாயக்கர் என கையெழுத்திட்டு உள்ளார்

போயர்களுக்கு மானியம்

இடம்

திண்டுக்கல் அண்ணா மாவட்டம் அம்மையநாயக்கனூரில் தியாகி திரு. ஏ. கந்தசாமி கன்னடியர் இடம் இச்செப்பேடுள்ளது. இச்செப்பேட்டினைத் தொல்பொருள் ஆய்வுத்துறை கல்வெட்டாய்வாளர் திரு. செ. போசு அறிந்து படியெடுத்துக் கட்டுரை ஒன்று எழுதியுள்ளார். செப்பேட்டு வாசகம் அடங்கிய அக்கட்டுரை தொல்லியல் கருத்தரங்கு என்ற நூலில் வெளியிடப்பட்டுள்ளது.

அமைப்பு

இச்செப்பேடு 28 செ.மீ. நீளமும் 18 செ.மீ. அகலமும் உடையது. தலைப்பகுதியில் செவ்வகமான இதழ் அமைப்பு உள்ளது. அதன் நடுவில் சிறுதுளை அமைப்புள்ளது. எழுத்துக்கள் பெரிதாகவும் ஆழமாகவும் பொறிக்கப்பட்டுள்ளன. முன்புறம் 36 வரிகளும் பின்புறம் 34 வரிகளும் உள்ளன. முடிக்கும் பகுதியில் வரிகள் நெருக்கமாகவுள்ளன. முன்புறம் தலைப்புப்பகுதியில் அமைந்துள்ள செவ்வக இதழ் அமைப்பில் தெலுங்கில் 'ஸ்ரீ(ரங்க) நாயகலு' என்று எழுதப்பட்டுள்ளது.

காலம்

சகம் 1453 கலி 4635 சுக்கில வருடம் தை மாதம் 27-ஆம் தேதி வியாழக்கிழமை. ஆண்டுகள் ஒன்றுக்கொன்று முரணாக உள்ளன. சுக்கில வருடம் தை மாதம் 27ம் தேதி என்பது மட்டும் சரி என்று கொண்டால் 24-1-1629 ஞாயிறு என்று கொள்ளலாம்.

செய்தி

திருமலை நாயக்கர் ஒருசமயம் அவசரமாகத் திருச்சிக்குச் சென்று மூன்று தினங்களில் மதுரை திரும்ப வேண்டியிருந்தது. வழக்கமாகப் பல்லக்குத் தூக்குபவர்களைக் கேட்க அவர்கள் தங்களது சனங்கள் சேகரமாக இல்லை எனவே அம்மையநாயக்கனூர் பாளையப் பட்டுப் பல்லக்குத்தூக்கிகள் வந்துள்ளார்கள். அவர்களால் முடியும் என்று சொன்னார்கள் அவர்களைக்கேட்க அவர்கள் தூக்கிச்செல்வதாக ஒப்புக்கொண்டு மூன்று தினங்களில் மதுரை யிலிருந்து திருச்சிக்குத் தூக்கிச் சென்று திரும்பினார்கள். அரசன் மகிழ்ந்து அவர்களுக்கு நிலங்களைக் கொடுத்தான். ஆனால் அவர்கள், நிலம் பிற்காலத்தில் தங்களிடம் தங்காது என்று கூறிக் தங்களுக்குக் குறிப்பிட்ட பகுதி நீர்நிலைகளில் மீன்பிடிக்க உரிமை பெற்றுக் கொண்டனர். அந்த உரிமையைக் குறிப்பதே இந்தச் செப்பேடாகும்.

பொம்மையக் கவுண்டன் பட்டிச் செப்பேடு-1

(அல்லிநகரம்-நாட்டாண்மை வழக்கு)

இடம்

திண்டுக்கல் அண்ணா மாவட்டம் திண்டுக்கல் வட்டம் செம்பட்டியை அடுத்த பொம்மையக்கவுண்டன் பட்டியில் பெரியகுடி திரு. பொ. பொம்மையன் அவர்களிடம் இச் செப்பேட்டுடன் மூன்று செப்பேடுகள் உள்ளன. இவை தொல்பொருள் ஆய்வுத்துறை, கோவை அகழ்வைப்பகக் காப்பாட்சியர் திரு. இரா. ப. கருணானந்தன் மூலம் அறியப் பட்டு செப்பேடுகளின் மைப்படிகள் எடுக்கப்பட்டன.

அமைப்பு

இச்செப்பேடு 23.5 செ.மீ. நீளமும், 15.5 செ.மீ. அகலமும் உடையது. தலைப் பகுதியின் இரு புறங்களில் சிறிய இதழ்களும் நடுவில் ஒரு பெரிய இதழும் அதன் நடுவில் ஒரு துளையும், உள்ளன. இப்பகுதியில் உ றாமசெயம் என்று பொறிக்கப்பட்டுள்ளது. முன்பக்கம் 28 வரிகளும் பின்பக்கம் ஆறு வரிகளுமாக எழுத்துக்கள் எழுதப்பட்டுள்ளன.

காலம்

ஆனந்த ஆண்டு ஆடி மாதம் 25-ஆம் தேதிக்குச் சமமான ஆங்கில ஆண்டு, 24-7-16:14 ஞாயிற்றுக்கிழமை.

செய்தி

அல்லியம்மாள் என்பவரால் அல்லிநகரம் என்ற ஊர் ஏற்படுத்தப்பட்டது. அந்த ஊரில் முதலில் குடியேறியவர் யார்? நாட்டாண்மை யாருக்கு? என்ற சச்சரவு பொம்மையக் கவுண்டன் மகன் சின்னாக்கவுண்டனுக்கும், பாப்பயக் கவுண்டன் என்ற மற்றொருவனுக்கும் ஏற்பட்டது. இவர்களது பிணக்கைப் பாளையக்காரர்கள் தீர்க்க முன்வரவில்லை. அப்போது திருமலை நாயக்கர் அன்னஞ்சி பாளையப்பட்டிற்கு வந்திருந்த செய்தியை ஊரார் கூற, பொம்மையக் கவுண்டன் மகன் சின்னாக்கவுண்டன் திருமலை நாயக்கரைப் பாத காணிக்கைப் பொன், அரிசி, பருப்பு, நெய், காய்கறிகளுடன் வணங்கி நியாயம் வழங்க வேண்டினான். திருமலை நாயக்கர் பாளையப்பட்டுகளைக் கலந்து ஆலோசித்துத் தவறு பாப்பயக்கவுண்டன் பேரில் உள்ளது என்று தீர்ப்புக் கூறி, சின்னாக்கவுண்டனுக்கு நாட்டாண்மைப் பதவி வழங்கினார். இச்செய்தியை இச்செப்பேடு அளிக்கிறது.

பொம்மையக்கவுண்டன்பட்டிச் செப்பேடு-2

(பெரியதன அதிகாரம் வழங்கிய பட்டயம்)

இடம்

திண்டுக்கல் அண்ணா மாவட்டம் திண்டுக்கல் வட்டம் செம்பட்டியை அடுத்த பொம்மையகவுண்டன்பட்டியில் பெரியகுடி திரு. பொ. பொம்மையன் அவர்களிடம் இச் செப்பேட்டுடன் மூன்று செப்பேடுகள் உள்ளன. தொல்பொருள் ஆய்வுத்துறை அகழ் வைப்பகக் காப்பாட்சியர் திரு. இரா.ப. கருணானந்தன் இச்செப்பேடுகள் வைத்திருப்பவர் முகவரியையும், தான் சேகரித்திருந்த மைப்படி மற்றும் குறிப்புகளையும் தந்து உதவினார். நேரில் சென்று செப்பேடு பார்க்கப்பட்டு, புதிய மைப்படிகள் எடுக்கப்பட்டன.

அமைப்பு

இச்செப்பேடு 25 செ மீ. நீளமும், 18.5 செ.மீ. அகலமும் உடையது. இதன் தலைப்பின் நடுவில் சிறு துளையுடன் கூடிய இதழமைப்பு உள்ளது. அதில் இரு வரிகளாலான வட்டம் இடப்பட்டு. அதனுள் ‘சயமுத்திரி பட்டயம் றசா கயி ஒப்பம்' என்று பொறிக்கப் பட்டுள்ளது. செப்பேட்டின் முன்பக்கம் மட்டும் 29 வரிகள் பொறிக்கப்பட்டுள்ளன.

காலம்

414 என்று ஆண்டு எழுதப்பட்டுள்ளது. இது சரியாக இல்லை. அதனை விடுத்து, அடுத்துள்ள விவரங்களின்படி செய ஆண்டு வைகாசி மாதம் 15-ஆம் தேதிக்குச் சமமான ஆங்கில ஆண்டு 13-5-1654 சனிக்கிழமை.

செய்தி

திருமலை நாயக்கர் திண்டுக்கல் பகுதி வந்திருந்தபோது சீவிலிச்சிறகைச் சார்ந்த பெரிய தனம் பொம்மையகவுண்டன் அரிசி, பருப்பு. ஆட்டுக்கிடாய் பாதகாணிக்கை முதலியவற்றுடன் சென்று பார்க்க, திருமலைநாயக்சர் என்ன வேண்டுமெனக் கேட்டார். அவன் வேண்டியபடி அவனது சாதியில் கம்பிளி, காளாஞ்சி, பிடிசெம்பு மரியாதைகள் வழங்கி சாதியில் நல்லவை, தீயவை. சாதியில் சேர்த்தல் விலக்கல் போன்ற அதிகாரங்களும் அளித்துப் பட்டயம் வழங்கினார். இச்செய்தியை இச்செப்பேடு தருகிறது.

பொம்மையக்கவுண்டன்பட்டிச் செப்பேடு-3

இடம்

திண்டுக்கல் அண்ணா மாவட்டம், திண்டுக்கல் வட்டம் செம்பட்டியை அடுத்து இவ்வூர் பெரியகுடி திரு. பொ. பொம்மையனிடம் இச்செப்பேட்டுடன் மூன்று செப்பேடுகள் உள்ளன. இவரிடம் இருக்கும் செய்தியைத் தொல்பொருள் ஆய்வுத்துறை அகழ்வைப்பகக் காப்பாட்சியர் திரு.இரா.ப. கருணானந்தன் தெரிவித்ததோடு, தான் சேகரித்து வைத்திருந்த மைப்பிரதியையும் குறிப்புக்களையும் தந்துதவினார். அவர் அளித்த முகவரியின் துணையோடு செப்பேடு இருக்கு மிடம் சென்று மைப்படிகள் எடுத்து வரப்பட்டன.

அமைப்பு

இச்செப்பேடு 24.5 செ.மீ. நீளமும் 17.5 செ.மீ. அகலமும் உடையது. தலைப்பின் நடுவில் ஒரு துளையுடன் கூடிய இதழமைப்புள்ளது. இதனில் இரண்டு வரிகளாலான முட்டை வடிவ

வட்டத்தின் 'நடுவில் ஆலவட்ட கவண்டன் பொம்மையகவண்டன்' என்று எழுதப்பட்டுள்ளது. ஒரு பக்கம் மட்டும் 26 வரிகளில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன்.

காலம்

பின் உள்ள குறிப்பின்படி செய ஆண்டு வைகாசி மாதம் 25-ஆம் தேதிக்குச் சமமான ஆங்கில ஆண்டு 13-5-1654 சனிக்கிழமை.

செய்தி

திருமலை நாயக்கர் திண்டுக்கல் பகுதிக்கு வந்திருந்த போது ஒன்பது ஊர் கூழப்ப நாயக்கனிடமும் சீவிலிசிறகைச் சேர்ந்த ஆலவட்டகவண்டன் (மகன்) பொம்மையக்கவண்டன் தங்கள் இரவிகுல சாதியில் தனக்கு முதல் அதிகாரம் தரவேண்டுமென்று கேட்க அதனை ஏற்று கூழப்ப நாயக்கன், மன்னர் திருமலை நாயக்கர் இருவரும் அதிகாரம் வழங்கிச் கையொப்ப மிட்டுச் செப்பேடு கொடுத்ததைக் குறிக்கிறது.இதே வருடம் இதே மாதம் 15-ஆம் தேதியில் இதே விபரத்திற்காக இவ்வூர் எண் 1 இட்ட செப்பேடு வழங்கப்பட்டுள்ளது. இச்செப்பேடு 20 தேதியில் அதே விபரத்திற்காக வழங்கப் பட்டிருக்கின்றது. இதில் 'ஒன்பது ஊர்' கூழப்பநாயக்கன் கையொப்பமும் இருப்பதால் மன்னன் கொடுத்த பட்டயத்தைப் பாளையப்பட்டு அங்கீகரித்ததைக் குறிக்கும் பட்டயம் ஆதல் வேண்டும்.

## 32.வல்லக்கவார் கன்னிவாடி நரசிங்க அப்பைய நாயக்கர் :-

**வல்லக்கவார் என்றாலே யாதவ ராஜகம்பள, தொட்டிய கம்பள நாயக்கரில் வலிமையானவர்கள் யாராலும் ஜெயிக்க முடியாதவர்கள்.சினன கதிரி நாயக்கரின் மகன் இந்த நரசிங்க நாயக்கர்.இவர் கன்னிவாடியை ஆட்சி செய்த சமயத்தில் மதுரையை ஆட்சி செய்தவர் விஜய குமார முத்து திருமலை நாயக்கர் ஆவார்.அவர் 72 பாளையக்காரர்களை அழைத்தார் அதிலும் மதுரையின் வளர்ப்பு பிள்ளையின் பாளையம் கன்னிவாடி பாளையம் ஆகும்.மதுரை மீது மைசூர் படையெடுப்பதாக ரகசியமாக ஒற்றர் மூலம் அறிந்தேன்.அவரர் பாளைய வீரர்களை தயார்படுத்த உத்தரவுபகிரப்பட்டது.மதுரையின் பிரதான அமைச்சர் சாம பையரின் மகன்கள் முத்து சாமி மற்றும் கோவிந்தயர் கருவாட்டு பொட்டலில் காத்து இருந்தனர்.அவர்கள் கன்னிவாடிதான் திண்டுக்கல் பாளையக்காரர்ககளின் தலைவர் என்பதால் அவரை அழைத்து மைசூர்காரர்கள் படை திண்டுக்கல் நோக்கி வருகிறது நீங்கள் உங்கள் பாளையத்தை கடந்து போகவிடாதீர்கள் என்று கேட்டுக் கொண்டர்.அவரும் படைகளை பலப்படுத்தி தயாராக காத்து 55 இருந்தார்.ரமணயய்யர் திண்டுக்கலை கைப்பறாமல் கன்னிவாடிக்கு எதிராக போரிட சென்றனர் ஏனெனில் கன்னிவாடி கைப்பற்றிவிட்டால் மதுரையை கைப்பற்றுவது எளிது என்பதால்.கன்னிவாடி நரசிங்க நாயக்கர் ரமணயய்ரை மங்கேரி வரை அடித்து துவைத்து துரத்திவிட்டார்.தோற்ற ரமணயய்ர் மீண்டும் வருவோம் என்று சொல்லி கொண்டே படையை திண்டுக்கல் நோக்கி நகர்த்தி**

**மதுரை தளவாய் முத்துசாமி ஐயருடன் போரிட்டார் முத்து சாமி ஐயர் எளிதில் விழுந்தார்.மீண்டும் கன்னிவாடியை நோக்கி படையை நகர்த்தினர். சிங்கம் போல கொதித்து எழுந்த நரங்க நாயக்கன் போரில் ரமணயய்யரின் மைத்துணன் தலையை ஒரே வெட்டில் வெட்டி சாய்த்தார்.**

**இந்த சமயத்தில் ஆரணி வெங்கடய்யர் என்பர் திண்டுக்கல் மண்டலத்திற்கு பொறுப்பேற்றார்.அவர் அனைத்து பாளையகாரர்களிடம் ஐந்து ஆறு வருடங்களாக கப்பம் கட்டாமல் இருக்கீறீர்கள் கப்பம் கட்டுங்கள் என்றார்.அதற்கு பாளையக்காரர்கள் திண்டுக்கல் மண்டல பாளையக்காரர்கள் மதுரைக்கே கப்பம் கட்ட மாட்டோம். Only ராணுவ உதவி தான். என்று சொல்லி இடத்தை விட்டு நகர்ந்தனர்.கன்னிவாடி நாயக்கர் மட்டும் சிறிது பணத்தை கட்டினார்.திண்டுக்கல் மண்டலம் என்னை மதிப்பதில்லை என கடிதம் எழுதினார் ஆரணி வெங்கடு. மைசூர் கூடுதல் படையை அனுப்பியது.கன்னிவாடி நாயக்கரை அடக்கினால் அனைவரும் அடங்கிவிடுவர் என கன்னிவாடி மீது போர் தொடுத்தனர்.ஆரணி வெங்கடை கன்னிவாடியிலிருந்து திண்டுக்கலுக்கு தோறக வைத்து துரத்தி அடித்துவிட்டார்.ஆரணி வெங்கடு மற்ற பாளையங்களின் மீது படையெடுத்து அடிபணிய வைத்தான்.மீண்டும் மைசூருக்கு கடிதம் அனுப்புகிறான். கன்னிவாடி தவிர அனைத்து பாளையத்தையும் கைப்பற்றிவிட்டதாக.இப்பொழுது ஹைதர் அலி மேலும் படையோடு வருகிறான்.அவனையும் அடித்து துரத்தி வரராககிரி வரை துரத்தி விட்டார் நாயக்கர்.வேறு வழியில்லாமல் நீ பெரும் வீரன் உன்னை உன் இடத்தில் வைத்து ஜெயிக்க முடியாது என்றான் ஹைதர் அலி.7000 சக்கர பணம் கட்டு என சொல்லி 3000 சக்கர பணத்தை வசூலித்து சென்றனர்.ஆரணி வெங்கடு கன்னிவாடி நாயக்கரை தளவாய் சமாபையன் சத்திரத்திற்கு வரச்சொன்னார்.சத்திரத்திற்கு சென்றபோது ஹைதர் அலி நாயக்கரை கைது செய்து ஸ்ரீரங்கபட்டிணத்திற்கு கொண்டு சென்று சிறையில் அடைத்தான்.**

## 33.*இலக்கியத்தில் கூளப்ப நாயக்கர்*

### *பதினான்கவது கூளப்ப நாயக்கர்*

நிலக்கோட்டை கூளப்ப நாயக்கருக்கர் மதுரை விஜய ரெங்கநாத நாயக்கரின் நம்பிக்கைகுரிய தளபதியாக இருந்தார்

இந்த காலகட்டத்தில் இரண்டு சிற்றிலியக்கங்கள் கூளப்ப நாயக்கரின் மேல் பாடப்பட்டன. ஒன்று விறலி விடுதூது மற்றொன்று கூளப்ப நாயக்கர் காதல்.இதில் இருந்து அக்கால

மக்களின் வாழ்க்கை முறை அறியலாம்.இந்த இரண்டிலும் பெஞ்சை(besanagar) என்பது தவறான உச்சரிப்பு வெளிநாட்டு பயணக்குறிப்பு பயணிகளால் தரப்பட்டு இருக்கிறது அது விஜய நகரையே குறிக்கும்.பெஞ்சை நகர் அதிபன் கூறுவதிலிருந்து விஜய நகரின் இரண்டாம் சாளுவ வம்சம் வல்லக்கவார் நரசிம்மனின் நெருங்கிய உறவினன் என அறிய முடிகிறது.குறிப்பாக அன்னதான மண்டபம்,தோசை குறிப்புகளை விறலிவிடு தூதில் அறிய முடிகிறது.

நிலக்கோட்டை வத்திலக்குண்டு கிராமக் கோவில் திருவிழாவிற்கு சடங்கிற்கும் அந்த ஊரை சேர்ந்த வியாபாரிகள் பத்து வகுப்பினரில் எட்டு வகுப்பினர் கவுண்டன்,கோமிட்டிஸ்,முகமதியன் ...போன்றோர்கள் தங்கள் லாபத்தில் ஒரு பங்கை கோவிலுக்கு கொடுக்க வேண்டும் என ஒப்பந்தம் போட்டு முச்சலிகா எழுதினர். அதில் மதுரை அரண்மனை ஆணையாளர் ,கர்த்தா காரியதர்சி நிலக்கோட்டை கூளப்ப நாயக்கர் கையெழுத்து இட்டு உள்ளார்.

## சிற்றிலக்கியம்:

### 34. நாகம கூளப்ப நாயக்கர் காதல் கதை

**காதல்:**

**காதல் இலக்கியங்கள் தோன்றிய காலத்தை இன்னதென்று அறுதியிட்டு உறுதி கூறுதற்குச் சான்றேதுமில்லை எனினும் இலக்கிய வரலாற்றை ஆராயுங்காலத்து 17, 18-ம் நூற்றாண்டுகளிலே இவ்வகை இலக்கியங்களை இயற்றுவதிலே புலவர் பெரு மக்கள் நாட்டம் செலுத்தினர் எனக் கூறலாம்.காதல் இலக்கியங்களிற் காலத்தால் பழமையானது 'கூளப்ப நாயக்கன் காதலே'. 17-ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே எழுந்த தாகும். இதனை யாத்தவர் 'சுப்பிரதீபக் கவிராயர்' மதுரை மாவட்டத்துத் திருமங்கலம் என்ற ஊரினர். இவர் பரஞ்சோதி முனிவரின் மாணாக்கர் என்பர் . இந்நூலினுள் நாகம கூளப்ப நாயக்கர் இவன் நாகம கூளப்பன், பெரியநாகேந்திரன், பெரிய நாயகன் என்ற பெயர்களிலே அழைக்கப் பெறுகின்றான். இவனைத் திருமலை நாயக்கனின் மைத்துனன்என்பர்.காதற் பிரபந்தங்களிலே முதன்மையும் தொன்மையும், எளியதும் இனியதுமாயது கூளப்ப நாயக்கன் காதலே. இரண்டிரண்டு அடிகளையுடைய 374 கண்ணிகளைக் கொண்டிலங்கும் இதனைத் தழுவியே ஏனைய புலவர்களும்**

**காதலிலக்கியங்கள் செய்தனரென்றால் இதன் அருமையையும் பெருமையையும் என்னென்பது? காதலிலக்கியத்தின் கதையமைப்பைக் காண்பதற்குக் கூளப்ப நாயக்கன்காதலே சிறந்த எடுத்துக்காட்டாகும். இனி கதையமைப்பைக் காண்போம். பாட்டுடைத் தலைவன் பரிவாரங்கள் புடைசூழ வேட்டைமேற் செல்கின்றான். நிமித்தம் கூறுவான் நடுவழியிற்கண்டு, காவலனுக்கு முழுவேட்டை கிடைப்பதோடு, கன்னி வேட்டையும் கிட்டுமெனக் கூறுகின்றான்.காட்டைக் கலைத்து வேட்டையாடுகின்றனர். அகப்படாத விலங்கும் அகப்படுகின்றது; ஆனால் மான் ஒன்று மட்டும் தப்பியோடுகின்றது. மானைத் தொடர்ந்தான் மன்னன். மானைத் தொடர்ந்தான் என்றதும்! இராமன் தொடர்ந்த மான் போன்றா? என மருள வேண்டா! அம்மான் அறிவரிய பெம்மானை சிறை யிருந்த செல்வியிடமிருந்து பிரித்தது; ஆனால் இம்மானோ கோதை யொருத்திபால் கூட்டுவிக்கின்றது. மானைக்கொன்று மலர்ச் சோலையிலே இளைப்பாறுகின்றான் மன்னன். மலர் கொய்ய வந்து தன் தோழியரைப் பிரிந்த ஒரு பாவை நல்லாளும் அப்பொழிலை அடைகின்றாள். காவலனும் கண்டுவிடு கின்றான்! மாதோ? மடமயிலோ? அன்றித் தேவமாதோ? என்று ஐயுற்றான்.எனினும் கண் இமைத்தலாலும், கால் நிலந்தோய்தலாலும் மண்ணக மடந்தையே என மனந்தேறினான். பாவையோடு பேசவேண்டுமென்ற ஆசை! ஆவலோடு, ஊரேது? உலகேது? உமது பேரேது? என வினவுகின்றான். பாவை நல்லாள் பதிலுரைத்தாளில்லை. வார்த்தை யொன்று பேசலாகாதோ என்று கெஞ்சினான். மிஞ்சினாள் தலைவி. எனவே கன்னியின் கட்டழகைப் பாராட்டி, காந்தர்வ மணத்திற்கு இசையச் செய்கிறான் காவலன்.இதற்குள் வேங்கை நிகர் வேந்தனைப் பிரிந்த வீரர்கள் தேடிவந்தனர். அரசனை அழைத்துக்கொண்டு அணிநகர் சேர்ந்தனர்.தலைவனைப் பிரிந்த தலைவி அழுதாள், விழுந்தாள், எழுந்தாள்,என் செய்வது? மன்னனைப் பிரிந்த மயக்கத்தால் மூர்ச்சையுற்றுவீழ்ந்தாள். இதற்குள் தலைவியைப் பிரிந்த தோழியரும் வருகின்றனர். நங்கையின் நிலைகண்டு நடுங்கினர். தூக்கமோ ? அன்றித்துணைவரைப் பிரிந்த ஏக்கமோ ? என்று அரற்றுகின்றனர். குறிப்புசிலவற்றால் தலைவனைப் பிரிந்தமையே தக்க காரணமெனத் தெளிந்தனர். பெற்ற தாய் உற்றது அறிந்து ஓடோடி வருகின்றாள்.உவகை யடைகின்றாள். பூவெடுக்க வந்த பூவை புதையல் எடுத்து வந்த செய்தி அறிந்து சிந்தை மகிழ்கின்றாள்.**

## 35.*சுப்ரதீபக்கவிராயர்*

உவமைக் கவியில் கம்பருக்கு ஒப்பனாவாராம் இவர் சுப்ரதீபக்கவிராயர்!நிலக்கோட்டை மன்னர் கூளப்ப நாயக்கர் காதல் இலக்கியத்தில் பாடல்கள் மனதை கவரும்.இதன் விளக்கவுரை எழுதியவர் கவியரசர்.காதல் காவியம் பாடின சுப்ரதீபக்கவியாரக்கு கவிராயபுரம் என்ற ஊரை பரிசளித்தார் நம் நாயக்கர்.பெனுக்கொண்டா ராஜ்ஜியத்தை கூளப்ப நாயக்கர் முன்னோர் ஆண்டபோது மலையனூரில் கம்மாளர்கள் வாழ்ந்து வந்தனர்.அந்த வம்சாவழியை சேர்ந்தவர் சுப்ரதீபக்கவிராயர்.கூளப்ப நாயக்கரின் அரசவைக் கவிஞராக அரசரவையை அலங்கரித்தார்.

தமிழுக்கு முதன் முதலில் சதுரகராதி படைத்த வீரமாமுனிவருக்கு தமிழ் சொல்லி கொடுத்து, தேம்பாவணியை வீரமாமுனிவர் சொல்ல இயற்றி தந்தார்.நிலக்கோட்டை மன்னர் வம்சாவழியை பற்றி கல்வெட்டுகள்,ஓலைச்சுவடிகள்,செப்பு பட்டையம் நன்றாக வாசித்து உணர்ந்து நிலக்கோட்டை மன்னரை பற்றி தசாங்கம் பாடியுள்ளார். பரஞ்சோதி முனிவர் எழுதிய திருவிளையாடல் புரணாத்தில் வறுமையில் வாடிய தருமிக்கு பொற்கிழி வாங்க சிவபெருமான் பாட்டு எழுதி தருமியிடம் தருவார்.நக்கீரர் பிழை காணவே அப்பாட்டில், சிவபெருமான் அவரை அழிக்க நெற்றிக்ண் திறப்பார் "நெற்றிக்கண் திறப்பின் குற்றமே என்பார் நக்கீரர்.பரஞ்சோதி முனிவரின் மாணவர் நிலக்கோட்டை (வல்லக்கவார்)அரசரவை புலவர் சுப்ரதீபக்கவிராயர்.இதைப்போல கன்னில்வாடி(வல்லக்கவார்) அரசரவை புலவர் பலபட்டடை சொக்காத கவிராயர் ஆவார்.இந்த இரண்டு புலவர்கள் நண்பர்கள் ஆனாலும் பாடல்கள் அரங்கேற்றும் போது அதில் உள்ள பிழைகளை சுட்டிக்காட்டாமல் இருந்ததில்லை.பலபட்டடை சொக்கநாத புலவர் சிவபெருமான் வண்டு விடுதூதுவில் செண்பக மலரில் வண்டுகள் மொய்ப்பதாக பாடுவார்.இலக்கியத்தில் வண்டுண்ணா மலர்களின் பட்டியலில் சண்பக மலர்களுக்கு முதலிடம் உண்டு என நமக்கு தெரியும்.நிலக்கோட்டை அரசரவை புலவர் சண்பக மலர் வண்டுகள் மொய்க்காது என கன்னில்வாடி அரசரவை கவிஞரிடம் மறுக்க சிவ பெருமானின் உதவியுடன் வண்டுகள் மொய்க்க வைப்பார்.சண்பக மலர் வண்டுண்ணா மலர் என்பது மன அளவே ஆகும்.

**பாடல்**

**"கோமுனிவர் கொண்டாடும் கூடற் பரஞ்சோதி மாமுனிவர் செம்பொன் மலர்ப்பாதம் நான்மறவேன்."என்ற அடிகளைச் சான்றாகக் காட்டுவர்.**

**பாட்டுடைத் தலைவன்கூளப்பநாயக்கன், மதுரை மாவட்டத்து நிலக்கோட்டையை ஆட்சி**

**செய்தவன். இதனைக் கவிராயரே,**

**பாடல்**

**கற்கோட்டை என்றவர்மேற் கண்சிவந்து கண்டவர்செம் பொற்கோட்டை யென்னப் புகழும் நிலைக் கோட்டையினான்."என்று பாடுகின்றார்.**

**பாடல்**

**மால்தொடர்ந்த மான்ஓர் மயிலைப் பிரித்தது, ஐயன் கால்தொடர்ந்த மான்ஓர் கருங்குயிலைக் கூட்டியதே**

**பாடல்**

**"பையப் பழம் நழுவிப் பாலில் விழுந்தது நான் செய்த தவமோ ? மகள்முன் செய்தபூ சாபலமோ?"**

**என்று இறும்பூதெய்தி ஈன்ற மகளை இருகையால் இறுகத்தழுவி ஒன்றுக்கும் அஞ்சாதே, போகம் உன் பங்காச்சி' என்று உறுதி கூறுகின்றாள்.**

**அதுபோது மங்கையை மணம் பேசத் தூதுவனை அனுப்பு கின்றான் அரசன். சேய்க்கு வரும் சிறப்பறிந்து சிந்தை மகிழ் கின்றாள் தாய். மகளைத் தேரிலேற்றித் தலைவனிடம் அனுப்பி அகமகிழ் கின்றாள். மங்கையை மணந்து மக்களைப் பெற்று மாண்போடு மனைவினை நிகழ்த்துகின்றான் மன்னன். கதையும் முடிந்தது; காப்பியமும்.**

**பாடல்**

**"பெஞ்சை நகர் வாழி ! பெரிய நாகேந்த்ரதுரை கஞ்சமலர் மாது கருணைபெற்று வாழியவே!"என்ற வாழ்த்தோடு முடிகின்றது.**

## 36. கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது

நூல் முகம் தோற்றுவாய் விறலியைத் தூது போக்குவது விறலி விடு தூது. பிணக்குக் கொண்ட மனையாளிடம் அவளைப் பிரிந்து சென்ற கணவனின் செய்தியையும் வருகையையும் சொல்லி, போனவனைப் பரிவோடு வரவேற்க அவளை இணக்கவல்ல

இளங்குமரிக்கு விறலி என்று பெயர்.காவிரியாகிய பெண், தனது அலைகளாகிய கைகளால் திருவடி வருடத் திருமால் அறிதுயில் கொண்டிருக்கும் திருவரங்க நகரிலே பிறந்தான் ஒருவன். ஐயங்கார் மரபிலே தான். அவன் பெயரே அட்டாவதானி. அவனுக்கு வேறு இயற்பெயர் ஏதும் இருப்பதாக நூலில் சொல்லப்படவில்லை. "அட்டாவதானி என்ப தாயினேன்" எனவும் "அட்டாவதானி என் பேர் " என் றும் தன்னை அவன் அறிமுகப்படுத்துகிறான் இரண்டு இடங்களில். அந்த அட்டாவதானி, தமிழ்நாட்டின் வட எல்லையான திருப்பதியிலே வாசுதேவ ஐயங்கார் மகளை மணம் புரிந்தான். அந்நங்கையின் பெயர் பூங்காவனம். அட்டா-வதானம் வல்ல அவன், அவனுக்கு இன்பக்கனியாக அமைந்த அப் பூங்காவனத்தோடு சீரங்கத்திலே இனிய வாழ்க்கை நடத்துவானாயினான். அங்ஙனம் வாழ்ந்த அட்டாவதானி பக்கத்து ஊரான திருச்சிராப்பள்ளியில் நாட்டம் செலுத்தலானான். அங்கு இன்பரசவல்லி யென்னும் விலைமாதின் வலையில் வீழ்ந்தான்.

இதனை அறிந்தாள் பூங்காவனம். விளைந்தது பூசல். இல்லாள் ஏச்சைப் பொறுக்க-மாட்டாமல் புறப்பட்டான் வீட்டை விட்டு அவதானி. பற்பல ஔர்களையும் சுற்றி விட்டுச் சோலைமலை வந்து சேர்ந்தான். அவ் அழகர் கோவிலில் ஞானியையன் என்ற ஒரு நண்பனைப் பெற்றான். 'சொக்கேசர் வாழும் மதுரை நகர் கண்டு தொழுது வர நீரும் உடன் வரவேண்டும்' என ஞானியையனை அழைத்தான் அவதானி. 'வேண்டாமப்பா அது; அங்கு போனால் நீ மாட்டிக்கொண்டுவிடக் கூடும்; அங்கே மதனாபிஷேகம் என ஒரு வேசி இருக்கிறாள்; அவளால் குடி கெட்டவர் அநேகர்' என, அவள் பிறப்பு வளர்ப்பு செய்கை முதலியவற்றை எடுத்து விரிவாக உரைக்கின்றார் ஞானியையர். அப்படி யொன்றும் தன்னைப்பற்றி அஞ்ச வேண்டாம் எனச் சொல்லி அவரை அழைத்துக் கொண்டு மதுரை அடைகிறான் அவதானி. மதுரை மீனாளை வணங்கினான்; சொக்கேசர் தாள் பணிந்தான்; ஆயிரக்கால் மண்டபத்துள் நுழைந்தான். அங்கே நடந்து கொண்டிருந்தது நடனம். ஞானியையன் சொன்னது சரியாக முடிந்தது. "ஆயிரக்கால் மண்டபத்தில் கண்டான் மதனாபிஷேகத்தை". அந்த விண் தலத்தை விட்டு வந்த மேனகையைக் கண்டவுடன் என்ன ஆனான்? அவளுடைய கொண்டைச் சொருக்கு அழகும் முத்துத் துராய் அழகும் செவ்வாய் முருக்கு அழகும் சேலை முகப்பில் கருக்கு அழகும் வேல் அழகு போன்ற விழி அழகும் தண்டையிட்ட கால் அழகும் பொற் கடகக் கை அழகும் ஓலை இட்ட காது அழகும் வச்ரமணிக் கச்சு இறுக்கும் மார்பு அழகும் சோதி முகத்து அழகும் துங்க ரத்ன மாது ரதி கட்டு அழகும் பொட்டு அழகும் கச்சை

கட்டி வந்த கட்டு மட்டு அழகும் கண்டு மயங்கி யே போனான். ஆட்டம் முடிந்தது. புறப்பட்டாள் வீட்டுக்கு மதனாபிஷேகம். பின் தொடர்ந்தான் அவதானி, ஞானியையனை ஏமாற்றிவிட்டு, மதனாபிஷேகம் வீட்டின் உள்ளே நுழைந்து விட்டாள், அவதானி. நின்றான் வாசலில், என்ன விசேடம் என்றாள் ஒரு தோழிவந்தது. "நம்பர் சொக்கலிங்கர் முன் நின்று ஆடி வந்த பெண் அரசி யார்?" என்று கேட்டான் அவதானி. 'ஓகோ! அது தெரிய வேண்டுமா? "மாணிக்கமாலை பெற்ற வச்சிரத்தை, கும்பகுடக் காணிக்கு வாய்த்த கனதனத்தை, ஆணி முத்தை, விண் இச்சைகொள்ள வந்த மேனகையை, பெண்ணுக்குப் பெண் இச்சை கொள்ள வந்த பெண் அமுதை, எண் அரிய சாத்ரவித கொக்கோக சாரத்தை, மேல் விருது பாத்திர சிரோ மணியை, பைங்கிளியை, வாய்த்த மடமானை, மரகதத்தை, மன்மத குடோரியை, செந்தேனை, மதனாபிஷேகத்தை" நீர் தெரிந்துகொள்ள வில்லையா? நன்றாக இருக்கிறது" என்று கேட்டு விட்டாள், கைம்மருந்துச் சொக்கி என்னும் தோழி. 'சரி; இருக்கட்டும்; வரலாமோ?' என்றான் அவதானி. 'நன்றாக வரலாம், வெள்ளையப்பன் தான் வேண்டுவது' என்றாள் பாங்கி. "வெள்ளைப்புது வெட்டு மின்னலாய் அப்படியே அள்ளிக் கொடுத்"து அனுப்பினான். பிறகு அவதானிக்கு ராஜ உபசாரம் நடந்தது. மதனாபிஷேகத்தின் இன்ப வாரிதியில் சிலகாலம் மிதந்தான் அவதானி. அவனிடம் இருந்த பொருள் முழுதும் பலவகையாகவும் அவள் கைக்கு மாறும்வரைப் பொறுத்திருந்தாள் மதனா பிஷேகம். எல்லாம் தீர்ந்தது; வெறுங்கையன் ஆனான் அவதானி. துரத்த வகைதேடினர் தாயும் மகளும். வந்தது சண்டை . வழக்குச் சபை ஏறியது. அம்பலத்தார் ஒருவகையாக வழக்கை ஒழித்து அவதானியை விடுதலை செய்து விட்டனர். அவதானி மதுரை ஈசனை வணங்கி விட்டுப் புறப் பட்டான். எங்கே? பாடல் தலைவனாகிய கூளப்பநாயக்கனிடம். தனது அட்டாவதானத் திறமையை அங்கே காட்டிப் புகழ்பெற்றான். ஏராளமான பரிசில்கள் கிடைக்கின்றன அவதானிக்கு. எல்லாவற்றையும் கொண்டு சிறப்பாகத் திரும்புகின்றான் தன் வீடு நோக்கி. தனக்கு முன்னதாகத் தன்மனையாட்டி பால் செல்க "தோகை விறலி நீ தூது" என விறலியைத் தூதாக விடுக்கின்றான் அவதானி. இதுவே கதை.

## *திம்மராய பெருமாள்*

தந்தி புவனமெலாம் தந்தவனை தந்தமலர் உந்தி திருமுகத்துக்கு கொப்பபென்றும்- மாதவனைக் கண்டேன் வல்வினையெல்லாமுடனேஆதவனைக் கண்ட பனி ஆக்கினேன்.

விளக்கம்:

மூன்று உலகை தந்தவர் பிரம்மா-அந்த பிரம்மாவை தன் நெஞ்சமலரில்(தாமரை) தந்தவர் திருமால் எந்தன் பெருமாள்.வலிமையான பெருமாளே! கடவுள்களுக்கு எல்லாம் முதன்மையானவர்(ராஜா) எந்தன் பெருமாள் திம்மராயா பெருமாள்.அவரை தொழுததும் சூரியனைக் கண்ட பனி போல எந்தன் துன்பங்கள் அனைத்தும் விலகின.கூளப்ப நாயக்கர் காதல்.

*அகோபில நரசிங்க பெருமாள்*

ஆளும் பெருமாள் அகோபிலமால் மெய்யருளெந்நாளும் பெறும் பெரிய நாயகன்மேற் காதல் சொல.

.விளக்கம்:நிலக்கோட்டையை கூளப்ப நாயக்கர் ஆளவில்லை கூளப்ப நாயக்கரை ஆளும் அகோபில நரசிங்க பெருமாளால் தான் ஆளப்படுகிறது

*மன்மதன் எங்கள் கூளப்பன்*

சிவபெருமான் அன்புக்(காம) கடவுளை (மன்மதனை) தன் நெற்றிக் கண்ணால் அழிப்பது வழக்கம்..

எங்கள் வேந்தன் கூளப்ப நாயக்கர் சிவபெருமாள் நெற்றிக் காணாத மன்மதன்.

*விளக்கம்*

யவணர்கள் தந்த பணம்:சீனர்கள் பல்லக்கு -யானைமீது சவாரி செய்து மைசூர் மேல் போரிட்டு ஜெயித்து கொண்ட வந்த பொருட்களும் கூளப்ப நாயக்கர் அரண்மனையில் இருக்கின்றன.நிலக்கோட்டை அகோபில நரசிங்க பெருமாள் கோவிலில் வாத்தியங்கள் வாசிக்க கூளப்ப நாயக்கரின் கடல் போல் உறவினர்களும்,வத்தலக்குண்டு மகாஜனங்களும்,சோழவந்தான்.மண்ணாடி மங்கல மகாஜனங்களும் ,அந்தணர்களும் நிலக்கோட்டையில் குழுமியிருந்தனர்

நூல் : விறலிவிடு தூது.

*இலக்கிய குறிப்புகள்*

மதுரையில் நாயக்க பேரரசை நிறுவித்த விஸ்வநாத நாயக்கர் தந்தைக்கு உறவினன் என்றும் அல்லது நாகம நாயக்கர் வழி வந்தவன் என்றும் கூறுகிறது.

கூளப்ப நாயக்கருக்கு நிகளங்க மல்லன் என்றும்.நாகமன்;பெரிய நாகேந்திரன் என்ற பெயர் இருந்ததாகவும் கூறுகிறது.

திருமலை நாயக்கனுக்கு மைத்துனன் என்றும்.விஜய ரங்க சொக்கநாத நாயக்கரால் பாராட்டபட்டவர் என்றும் கூளப்ப நாயக்கரின் யானையின் பெயர் சருவசித்திவாரணம் ஆகும்.அவரின் கொடி பக்கரை(குதிரை அங்கவடி)என்றும்

அவருடைய குருவின் பெயர் வேத வியாச பட்டரையங்கார் என்றும் கூறுகிறது.

தமிழ்வாணருக்கு நிறைய கொடை கொடுத்துள்ளார் என்றும் கூறப்பட்டுள்ளது..கூளப்ப நாயக்கர் காதல் இலக்கியத்தில் தசாங்கத்தில் மன்னனை பற்றி அறிய முடிகிறது.அந்த சிற்றிலியக்கங்களை இயற்றியவர் சுப்ரதீபக்கவிராயர் ஆவார்.

*நிலக்கோட்டை (கற்கோட்டை)*

கற்கோட்டை என்றவர்மேற் கண்சிவந்து கண்டவர்செம்பொற்கோட்டை என புகழும் நிலக்கோட்டையினான்.

விளக்கம்:

பகைநாட்டு அரசர் நிலக்கோட்டையை கற்கோட்டைதானே உன்னால் எங்களை என்ன செய்துவிட முடியும் என சொன்னவுடன்!

கூளப்ப நாயக்கர் கோபத்தில் கண்சிவக்க ! பயந்த பகைநாட்டு அரசர்

மக்களின் பாதுகாப்பிலும்,நல்லாட்சியிலும் இந்த கூளப்ப நாயக்கர் கற்கோட்டை மக்களால் பொற்கோட்டை என புகழப்படுகிறது.அந்த பொற்கோட்டையின் சொந்தக்காரர் கூளப்ப நாயக்கர்.

*பாடல்*

புள்ளியிருந்த கூர் நெடுவேற் போசன் அரண்மனையின் உள்ளிருந்து கோட்டை வாசல் வந்தான்.

விளக்கம்:

கூளப்ப நாயக்கருடைய வேல் எந்நேரமும் பகைவரை கொன்று குவித்ததால் தங்களுக்கு நிச்சியம் உணவு கிடைக்கும் என்று கழுகுகள் அங்கேயே சுற்றிக் கொண்டு

இருந்ததாம்.இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது வல்லக்கவார்கள் வேல்,(ஈட்டி) வைத்து சண்டையிடுவது வழக்கம் என்று.போச மகராஜவையும் ஒப்பிடு செய்துள்ளார்.

*பரி*

விருப்பத்தோடு போர்களத்தில் புகுந்து வெற்றியோடு திரும்பி வரும் குதிரைகளை கொண்டவர் நாகம கூளப்ப நாயக்கர்.

*யானை*

போரில் புகுந்து பொருந்தி எதிரியின் கொடிகளை பூமியில் போட்டு மிதித்து திரும்பி வரும் யானைகளை கொண்டவர் நாகம கூளப்ப நாயக்கர்.

*குடை*

வானத்தில் உள்ள பிறை சந்திரனை வெல்வதற்கு பூமியில் முளைத்து எழுந்த ;மற்றொரு பிறை சந்திரன் போல்,வெண் கொற்றக் குடையுடையவர் நாகம கூளப்ப நாயக்கர்.

*முரசு*

கடல் குமுறுவது போல ;மேகம் இடிப்பது போல ;எதிரிகளின் காதைக் குடையும் முரசு கொண்டவர் நாகம கூளப்ப நாயக்கர்

*ஆணை*

அஞ்சுவோருக்கு அவர் வாக்கு அருமருந்து ;அஞ்சாமல் மிஞ்சி போகும் சிற்றசுகளின் மார்பை குடைந்து அவர்களின் ஆணவத்தை அடக்கும் அம்பு போன்றது எங்கள் நாகம கூளப்ப நாயக்கரின் ஆணை.

*வல்லக்கவார் பாடல்கள்*

சரஸ்வதியும் புகழும் பெஞ்சை வல்லக்கவார் குலத்தை சேர்ந்தவன் எங்கள் நாகம கூளப்ப நாயக்கர்.

வல்லக்கவார் குலத்தில் வாள் வேந்தர் கண் குளிர பல்லக்கிலே பவனி வரும் பாக்கியவான்-கூளப்ப நாயக்கர்.

*<u>படை</u>*

கூளப்ப நாயக்கர் பல்லக்கு ஏறும் முன்னரே இராஜகம்பளத்து படைவீரர்கள் வெற்றி செய்தியை மன்னனுக்கு கொண்டு வந்துவிடுவர்

*<u>முறை</u>*

நாகம கூளப்ப நாயக்கர் மன்னன் திருமலை நாயக்கருக்கு மைத்துனன் முறையாவான்.

*<u>கதவு</u>*

பொன் அங்கே மின்னும் ;வஜ்ஜிர பொடி அங்கே திகழும்.முன் பக்கம் தங்கம்.பின் பக்கம் முத்துகள் அப்படி ஒரு வாசல் கதவு.

*<u>வாசல்</u>*

ஒட்டகத்தில் டமார ஒலி;,மாளிகையில் பேரிகை ஒலி ;எதிரே குதிரையின் ஒலி அப்படிப்பட்ட வாசல்அது சிங்கள ராஜாக்கள் கப்பம் கட்டும் வாசல்.யானைக்குட்டிகள் விளையாடும் வாசல்.சீனாக்காரர்கள் காணிக்கை கொண்டுவரும் வாசல்.

அந்த வாசலில் ஒரு பக்கம் ஆடை வழங்குவார்கள்..ஒரு பக்கம் அன்னம் வழங்குவார்கள்.யாசகம் கேட்டு வருபவர்களுக்கு பொன் வழங்கு வார்கள்.நாகம கூளப்பநாயக்கரோ நீதி நெறி தவறாமல் நீதி வழங்குவார்.

அழகிய பெண்கள் மீன் விழி மங்கையர் நடனமாடுவர்.மன்மதனுடைய செங்கோல் ஆட்சி..மகாலட்சுமி கூத்தாடுவாள்.

வேதங்கள் பொய்க்கலாம்.மேகம் மழை தராமல் போகலாம்.ஏன் சந்திரனும் சூரியனும் கூட வராமல் போகலாம்.ஆனால் நாகம கூளப்பன் சொன்ன வார்த்தைகள் பொய்க்காது

கற்பக மரத்திற்கும்;மேகத்திற்கும் கொடை கொடுக்கும் கைககள் அவன் கைககள்.

*<u>பாடல்</u>*

மண்டுஅமர் யுத்தகளத்து ஒன்னார் உயிர் மேய்ந்த குற்றுடைவாள்

வைத்துக்கட்டும் மருங்கினான்.

பொருள்: மூன்று நாட்டு எதிரி உயிரை குடித்த குற்றுவாள் செருகுமங்கள் கூளப்ப நாயக்கர்.

*பாடல்*

கைதலத்தில் ஐந்தருவும் ஐந்து விரலாகி தருவ எனச்

செந்தமிழுக்கு நல்கும்மலர்ச் செங்கையான்.

பொருள்:

உள்ளங்கையில் தமிழுக்காக கொடுத்து கொடுத்து சிவந்த செங்கையை உடையவன் எங்கள் கூளப்ப நாயக்கர்.

ஐந்தரு என்பன சந்தனம்,அரிசந்தனம்,மந்தாரம்,பாரிசாதம்,கற்பகம்..இவை தெய்வத்தன்மை உடையவை .கேட்டதை கொடுப்பவை.

கூளப்ப நாயக்கன் கையில் உள்ள விரல்கள் அல்ல.இந்த ஐந்தருதான் விரல்களாக உள்ளன.

வராகமலை(பன்றி மலை)..

அந்த மலை நிலக்கோட்டைக்கு அரணாக இருந்ததும் என்றும் அந்த மலையில் இருந்த வேடவர்கள் அந்த மலையிலிருந்து வானுலகம் சென்று தேவர்களை சந்தித்ததாக சுப்ர தீபக் கவி சொல்கிறா

கூளப்ப நாயக்கர் ஆறு குடவனாறு(குடகனாறு)

அந்த ஆற்றில் இளம் பெண்கள் மஞ்சள் தேய்த்து குளிப்பதால் அந்த மஞ்சள் கலந்த நீர் வாய்க்கால் வயல்களில் பாய்ந்து பயிர்களுக்கு தீங்கு செய்யும் பூச்சிகளை எல்லாம் அழித்ததாக கவி சொல்கிறார்.

## 37.கூளப்ப நாயக்கரின் குடகனாறு.

**கூளப்ப நாயக்கர் ஊர்களை உருவாக்கி குளங்களையும் கண்மாய்களையும் கோயில்களையும் கட்டினார்.கூளப்ப நாயக்கரின் ஊர்களின் கண்மாய்களை நிரப்ப தன் ஆறான குடகனாற்றில் இருந்து மழைநீர் வழித்தடம் கால்வாய் அமைத்து தன்னுடைய ஊர்களை எல்லாம் செழிப்படைய செய்தார்.**

**விரிவாக்கம்:**

**தமிழகத்திலுள்ள மேற்குத் தொடர்ச்சி மலை பகுதிகளில் ஒன்றாக திகழ்வது கொடைக்கானல், பன்றிமலை, பண்ணைக்காடு, பெரும்பாறை, ஆடலூர்**

**உள்ளிட்ட மலைப் பகுதிகளில் பெய்யும் மழைநீர் சேர்ந்து குடகனாறு உருவாகிறது.திண்டுக்கல், வேடசந்தூர், நிலக்கோட்டை உள்ளிட்ட 4 தாலுகா பகுதியில் உள்ள விவசாயிகளுக்கும், பொதுமக்களுக்கும் முக்கிய குடிநீர் ஆதாரமாக குடகனாறு அமைந்துள்ளது.இந்தக் குடகனாறு ஆற்றின் தென்பகுதி கன்னிமார் கோவில் அருகே தொடங்கும் ராஜவாய்க்கால் மூலமாக கிடைக்கும் மழைநீர், மழை காலங்களில் நரசிங்கபுரம் குளம், போடிகாமன்வாடி கண்மாய்,செங்கட்டாம்பட்டி கண்மாய் போன்றவற்றை நிரப்புகிறது.**

**செங்கட்டாம்பட்டி கண்மாயை அடுத்துள்ள சீத்தாப்புரம் பாப்பன்குளம், குளத்துப்பட்டி பெரியகுளம், பின்னர் கூளப்ப நாயக்கரின் ராஜாதானி நிலக்கோட்டை கொங்கர் குள கண்மாயை(150 ஏக்கர்) நிரப்பும். பின்னர் சிலுக்குவார்பட்டி ஊராட்சியில் உள்ள மன்னவராதி கண்மாய், பாப்பன்குளம், பொன்னன் குளம் உள்ளிட்ட கண்மாய்கள் நிரம்பும்**

*கூளப்ப நாயக்கர் படை:-*

1)யானைப்படை

2)குதிரைப்படை

3)தேர்ப்படை

4)காலாட்படை

**5)**நாய்ப்படை

இருந்தை நாம் பல பாடல்களில் மூலமும்,விஜய நகர ராயர்கள் கொடுத்த பரிசுகளின் மூலம் அறிகிறோம்.

இதைத்தவிர நாய்கள்,ஒட்டகங்கள் வேட்டைக்கும்,போருக்கும் பழக்கப்படுத்தி பயன்படுத்தப்பட்டு இருக்கின்றன.

கூளப்ப நாயக்கர் காதல் என்ற சிற்றிலக்கியத்தில் வேட்டை செய்தியை அறிகிறோம்.

*மன்னர்களின் பொழுது போக்கு*:

பொழுது போக்கிற்காக வேட்டைக்கு செல்வது உண்டு.

விஜய நகர மன்னர்கள் யானை வேட்டை,புலி வேட்டை,பன்றி வேட்டை ஆடியதை அவர்களின் புனைப் பெயர்களை வைத்து அறிய முடிகிறது.

*நிலக்கோட்டை கூளப்ப நாயக்கரின் வேட்டை*

அவர் பன்றி மலை வேட்டை போவது வழக்கம்.அவருக்கு திடீரென்று வேட்டைக்கு செல்ல ஆசை வந்தது.கட்டியம் கூறுவோரை அழைத்து வேட்டைகாரர்களுக்கும் மதுரை சேனாதிபதிகளுக்கும் சொல்லச் சொன்னார்தங்க வண்ணத்தில் ஜொலிக்கின்ற நிஜார் அணிந்து கொண்டார்;வஜ்ஜிரத்தினலான கவசம் போட்டுக் கொண்டார்;வாள் செருகும் இடைபட்டை(பெல்ட்) கட்டிக் கொண்டார்அழகான மாணிக்க மோதிரத்தை அணிந்து கொண்டார்.உறையை விட்டு வெளி வந்தால் எதிரியின் மார்பை பதம் பார்க்கும் ஈட்டியை கையில் பிடித்தார்.பன்றி ,புலி,யானையின் ஆணவத்தை அடக்க சிங்கம் குகையை விட்டு வெளியே வந்ததது போல் அவர் அரண்மனையை விட்டு கோட்டை வாசலுக்கு வந்தார.

*பரிவாரங்கள்*

பரிவாரங்கள் புறப்பட்டன.கொற்றக் குடையேந்திச் சிலர்,கொம்பு ஊதியபடி சிலர்;பேரிகை முழங்கிச் சிலர் வாயு வேகத்தை கால் வேகமாக கொண்ட குதிரையின் மேல் அமர்ந்திருந்தார்கள்,பிரதானிகள்,மணியக்காரர்கள் கர்ணீகர்கள் பின்னே வர,தளபதிகள்;படைவீரர்கள் அணிவகுத்து வர கூளப்ப நாயக்கரை பல்லக்கில் முன்னே சென்றார்.

*கூட வந்தவர் நினைப்பு*

சிங்கத்தை கொன்றாவது மன்னனிடம் தங்கப் பதக்கம் பெற வேண்டும் என சில பேர் நினைத்தார்கள்.புலியைக் கொன்று வீரத்தண்டை வாங்க வேண்டும் சில பேர்,புலியை சுட்டு புலித்தோலை கேடயத்தில் ஒட்ட சில பேர்,கவரி மானை வெட்டி தங்கள் அரசருக்கு வாள் கொண்டு வர வேண்டும் சில பேர் ,தங்கள் வைப்பாட்டி மக்கள் மார்பிலே அணிய புலி நகம் கொண்டு வர சில பேர்,இரண்டாவது மனைக்கு சவுரியாக கவரி மான் வால் கொண்டு வர சில பேர்,கூத்தியாருக்கு மருந்து போடும் போது சேர்த்து போட கரடியின் ஈரலை கொண்டு வர சில பேர் இவ்வாறு ஒவ்வொருவரும்

ஒவ்வொன்றை நினைத்த படி;காட்டை கலைக்க வெடிவைக்கும் வெடிகாரர்கள்;வேலேந்திய படை வீரர்கள் முன்னால் நடக்க படை சென்றது.தூக்கி பிடித்த குந்தங்கள் வானமே விழுந்து விட்டது போல் முன்னால் நடக்க,ஒட்டகத்தின் முதுகிலே மேளம் பேரொலி செய்ய;மேகத்திற்கு கூட இந்த ஒலி இல்லை என ஒட்டகம் இறுமாப்போடு வர,கொட்டு,உடுக்கை,ஊதும் கொம்பு,கட்டு வலை கை வைட்டை கத்தி,புலியை கவ்வ புறப்பட்து போல புறப்பட்டு வந்த நாய்கள்.குத்தீட்டிகள்;கவண் வில்லோடு சிலர் வந்தார்கள்.அவர்களுக்கு பானை வயிறு;மூன்று முழம் தாடி ; செம்பட்டை ரோமம்;கரு நீலக் கச்சை அணிந்து இருந்தார்கள்;யார் இவர்கள்?இவர்களே காட்டு வேடவர்கள்;இவர்கள் வந்தார்கள் கண்டார்கள்.வணங்கினார்கள்.

இவர்கள் முன்னே நடக்க;கூளப்ப நாயக்கரின் வெள்ளைக் கொடி நடுவிலே;கருடக் கொடி முன்னே போக;இவை போடும் கோஷங்களை கேட்டு சீன தேசம் நடங்கிற்று.அப்போது செம்பூத்து பறவை ஒன்று இடமிருந்து வலம் பறந்தது.இது நல்ல சகுனம் ராஜ சகுனம் என்றான் ஒருவன்.செம்பூத்து வலம் பாய்ந்தால் முழு வேட்டை நடக்கும் என்றான்.

### *காட்டைக் கலைத்தல்*

இதோ பன்றி மலை அடிவாரம் வந்துவிட்டது.நாலு பக்கமுமம் காட்டு வேடுவர்கள் வலை கட்டினார்கள். வேலிக்கு பக்கத்தில் துப்பாக்கிககாரர்கள் நின்றார்கள்.எல்லோரும் குதிரையை விட்டு இறங்கினார்கள்.படைகள் குலவை சத்தமிட்டன.முரசுகள்முழங்கின;வேலேந்தியவர்களும்;வில்லேந்தியவர்களும்;ஈட்டியேந்தியவர்களும் அங்கும் இங்குமாய் ஓடி காட்டை கலைத்தார்கள்.

### *வேட்டை ஆரம்பம்*

பன்றி;முயல்;கரடி;புலி மான் காட்டு எருமை அனைத்தும் திக்கு திசை தெரியாமல் ஓடின.அவர்கள் அம்பால் அடித்தார்கள்;வேலால் அடித்தார்கள்;மறித்தார்கள் பிடித்தார்கள்;துப்பாக்கியால் சுட்டார்கள்; காட்டெருமையை ஒளிந்து இருந்து பிடித்தார்கள்.பன்றியின் கன்னத்தில் வேல் பாயந்தது.துப்பாக்கிச் சூடு நடந்தது.சீறி வந்த புலிகள் வேல் பட்டு துடித்தன.கரடிகளும் முயல்களும் வலையில் விழுந்தன.நாய்கள் மான்களை கவ்வின.ஒழக்கமுள்ளவன் தாசியின் கையில் சிக்கியது போல மான்கள் நாய்களிடம் சிக்கின;வள்ளலை பாடும் புலவரின் வறுமையை போல மயில்கள் பறந்தோடின.பெண்ணாசை தூக்கியெறிந்த யோகி போல் ஒரு காட்டெருமை வலையை

பிய்த்து கொண்டு ஓடியது.புலியை சுட்ட ஓசை;சிவ பெருமானின் இடபக்கமுள்ள வியாக்கிர பாதன் என்ற புலியும் ;சந்திரனும்;முயலும் மானும் கொஞ்சம் பயந்து கொஞ்சம் மனம் தெளிந்தன.

*வண்ணாத்தியார்:-*

விருத்தம்

சூரியனைப்போல பகைவர்களை எல்லாம் அழித்து பல விருதுகளை பெற்றவன் அர்ச்சுணன்.

அவனைப்போல உடையவனே! எங்கள் பெரிய நாகம கூளப்ப நாயக்கரே!

பகையரசுகள் தோற்று ஏதாவது ஒரு பொருளை பெஞ்சை நகர் நிலக்கோட்டைக்கு கப்பம் கட்ட வருவர்.

அந்த நாட்டில் அழகாய் வரும் வண்ணாத்தியரே!

உங்களுக்கு மருத்துவம் தெரியும். பெண்கள் கருவுற்று இருக்கிறீர்களா என நாடி பார்த்து கூறி விடுவீர்கள்.

(அக்காலத்தில் நாவிதர் மனைவியருக்கும் மருத்துவம் தெரியம்

*கூளப்ப நாயக்கர் சந்திரஹாச வாள்*!

வெண்பா

வில்லும் கொடியும் வில்லேந்தியர்வருமான சேரனை வெற்றி கொண்ட,வீரம் பொருந்திய மாறன் என சிறப்பு பெயர் பெற்ற பாண்டியன் வாளை வீசி போர்க்களத்தில் வல்லம் என்ற இடத்தில் வென்று,பகைவரது மண்ணை கவர்ந்து கொள்ளும் இயல்பினையும்,தனக்கு அடிபணிந்தாருக்கு தன் ஆட்சியே கொடுத்துவிடும் இயல்பினையும்,வெற்றியை சொல்லும் அவனது வாள்.

இடைச்சியார்

இப்பாடல் எண்சீராசியத்தால் ஆனது.

கோபத்தையுடைய வடித்தலையுடைய வாள் வீரன்.

ஒன்பது பெரிய பாளையம் போல கொண்ட ஊரினை உடையவன்.உலகை ஆளுபவன்.

ராஜாக்கெல்லாம் ராஜா மகாராஜா.

நல்ல சொற்களை கொண்டுவரும் புலவர்களை எல்லாம் வாரி வாரி வழங்கி ஒன்று சேர்க்கும் பெஞ்சை நகருக்கு உரியவனே!அப்படி பட்ட மாநாகரில் இடைசிறுத்த தெருவில் வரும் இடைகுலத்தில் உதித்தவரே!

## *கூளம பூபதி கும்மி*

கூளம பூபதி என்ற கும்பி பாடலில் நிலக்கோட்டை திருவேங்கட கூளப்ப நாயக்கரை பற்றிய கும்மியாகும்.இந்த கும்மி பாடலில் மன்னர்கள் தீர விசாரத்தே நீதி வழங்க வேண்டும் என்ற கருத்து வழியுறுத்தப்படுகிறது.வெள்ளைக்காரனை எதிர்த்த கூளப்ப நாயக்கருக்கு(17வது பட்டம்) நிலக்கோட்டையில் பாளையம் முறை ஒழிக்கபட்டு பொது ஏலத்தில் சொத்துக்கள் விடப்பட்டது.பின்னர் பெயரளவுக்கு ஜமீன்தாரி பொறுப்பு கொடுக்கபட்டு பிடுங்கப்பட்டது.அவருக்கு இருமகன்கள் மூத்தவர் சிந்தம கூளப்ப நாயக்கர் மற்றும் இளையவர் காமைய கூளப்ப நாயக்கர்.இளையவர் காமய கூளப்பநாயக்கர் பெரியோர்களால் பட்டம் கட்டப்பட்டது. கி.பி 1812ல் மறைந்தார்.

இந்த காமய கூளப்ப நாயக்கருக்கு இருமகன்கள் மூத்தவர் கூளப்ப நாயக்கர் மற்றும் இளையவர் திருவேங்கட கூளப்ப நாயக்கர். இளையவருக்கு 1812ல் பட்டம் பட்டம் கட்டப்பட்டு கி.பி 1857ல் இறந்தார்.இவர் தான் கூளம பூபதி கும்மிபாட்டின் கதாநாயகன்.கூளம பூபதி கும்மியை இயற்றியவர் சண்முகபிள்ளை மற்றும் எழுதியவர் முத்துக்குமார பிள்ளை.

கும்மியில் தன்னை சண்முக தாசன் எனக்கூறி கொள்கிறார்.நான் தேடியதில் அக்கால கட்டத்தில் சண்முகநாத கவிராயருடன் ஒத்து போகிறது.இவரே கூளம பூபதி கும்மியை இயற்றி இருக்கவேண்டு . **கும்மியின் முதற்பகுதியினும், இறுதிப் பகுதியினும் சில வரிகளிலேயே திருவேங்கிடக் கூளமபூபதியின் புகழ் பரக்கப் பேசப்பட்டு விடுகிறது.சீர்கொண்ட பெஞ்சை நகர்க்கதிபன், மேதினி போற்றும் மகராசன், நன்னிலைக் கோட்டைக்கு அதிபதி, ஆதியில் நூலுரை பொய்த்தாலும் மதிஆதவன் நாழிகை ஏய்த்தாலும் மேதினி நீதி வழுவாத திருவேங்கி, கூளம பூபதி, வாகன், மன்மதன், புவிக்கொற்றவன், நீதமனோகரன், செய மாதவன், பூமகள் மேவும் புயராசன், நாவலர் போற்றிய நன்னிதி, செயராமாவதார மகீபதி, காவலர் கப்பம்தபருநிதி, காமய்ய வேளனுள் காதலன், பணமலர்மாலையணி திருவேங்கிட பாக்கிய யோக தயாநிதி, என்றெல்லாம் இக் கூளமபூபதி போற்றாப்படுகின்றான்.**

## 38.*அம்மைய நாயக்கனூர் போர்.*

இன்றைய தமிழ்நாடு, ஆந்திரா கர்நாடாக பகுதிகளை ஆங்கிலேயர்கள் கருநாடகம் என்று அழைத்தனர்.ஹைதரபாத் நிசாமின் கீழ் முகமதியர்கள் ஆற்காடு பகுதிகளை நவாப் என்று பெயரில் ஆட்சி செய்து வந்தனர்.ஆற்காடு நவாப் தோஸ்த் அலியின் மருமகன் சந்தாசாகிப் ஆவார்.மதுரையில் விஜய ரங்க சொக்காதன் வாரிசு இன்றி இறக்கவே அவரது தம்பி மகனுக்கு முடி சூட்டி காப்பாளர் ஆட்சி ஆளுகிறார் ராணி மீனாட்சி.முடி சூட்டப்பட்ட மகனின் தந்தையான பங்காரு திருமலை தனக்கு முடி சூட்ட வேண்டும் என்றும் கலகம் செய்கிறான். ஆற்காடு நாவப் உதவியை நாடுகிறான் திருமலை.நவாப் சந்தாசாகிப் அனுப்பி வைக்கிறார்.ராணி மீனாட்சி மதுரையை தாக்ககூடாது என்று ஒரு கோடி ரூபாய் கொடுத்து குறான் மேல் சத்தியம்வாங்குகிறார்.ஒரு கோடியையும் வாங்கிக் கொண்டு சத்தியமும் பண்ணி மதுரையை தாக்கி ராணி மீனாட்சியை சிறைபிடித்து சிறையில் விசம் அருந்தி இறக்கிறார் ராணி.

(குறான் இல்லை செங்கல் என கூறப்படுகிறது.கூறப்பட்டாலும் பொய் சொன்னதால் கொலையுண்டு இறக்கிறான் பல வருடங்களுக்கு பிறகு அது வேற கதைபங்காரு திருமலையும் தான் ஏமாற்றபட்டத்தை அறிந்து திண்டுக்கல் பாளையக்காரர்களை ஒன்று திரட்டி சந்தாசாகிப்புக்கு எதிராக போர் செய்கிறார்.ஒரு நாள் முழுவதும் நடந்த போரில் இருபுறமும் நிறைய இழப்பு.எதிர்பாரதவிதமாக ஏதோ ஒருதிசையில் வந்த மற்றொரு ஆற்காட்டு படைகளின் தாக்குதலால் நாயக்கர் படை தடுமாறியது.சில பாளையக்காரர்களின் வீரமிக்க போரால் ஆற்காட்டு படை விழி பிதுங்கியது. அந்த பாளையக்காரர்களில் நிலக்கோட்டை சிந்தம கூளப்ப நாயக்கரும் ஒருவர்.பின்னர் தளபதி கொல்லபட்டு பங்காரு தப்பி ஓடியதால் சிந்தம கூளப்ப நாயக்கரும் பின் வாங்கினார். போர் நடந்தற்கான நடுகல் இன்றளவும் நிலக்கோட்டை தாலுகா அம்மையநாயக்கனூர்ராஜதானிக்கோட்டையில் உண்டு.வரலாற்றில்திண்டுக்கல் பாளையக்கார்களின் வீரம்,கொடை போன்றவை அளப்பறியது.

## 38Aஹைதர் அலி:-

**கி.பி 1742ல் திண்டுக்கல் நாடு மைசூர் அரசுக்கு மாறியது.கி.பி 1756ல் ஹைதர் அலி பழநி, கன்னிவாடி,எரியோடு, சொக்கம்பட்டி,போடி நாயக்கனூர் உத்தம பாளையம் போன்ற பாளையங்களை கொள்ளையடித்தும், பேஷ்குஷ் வாங்கினார்.அவர் திண்டுக்கல்**

**நாட்டில் நுழையும் போது இரண்டு பாளையம் மட்டுமே இணைத்துக் கொண்டார். திண்டுக்கல்லை விட்டு செல்லும் போது அம்மையநாயக்கனூர்,நிலக்கோட்டை,மாம்பாறை ,இடையக்கோட்டை, கோம்பை இணைக்கபடவில்லை.மற்ற எல்லா பாளையங்களையும் இணைத்துக்கொண்டார். ஐந்து பாளையங்கள் இணைக்கபடாதற்கு**

**காரணம் இந்த பாளையக்காரர்கள் ஹைதர் அலிக்கு படை கொடுத்து உதவினர். பின்னர் உதவி செய்த நிலக்கோட்டை பாளையத்தையும் பிடித்துக்கொள்கிறான்.**

**கி.பி 1772 ஹைதர் அலி தனது மைத்துனன் மிர்சாகிப்பை திண்டுக்கல் நாட்டின் ஆளுநராக நியமித்து சென்றார்.கி.பி 1783 ஆங்கிலேயர் வசம் இரண்டாம் மைசூர் போர் மூலம் சென்றது.சையது சாகிப் என நீளுகிறது**

**ஹைதர் அலி,திப்பு சுல்த்தானுக்கு நிலக்கோட்டை பாளையக்காரர் உதவி செய்தாலும்.பெரும் செல்வங்களும்,குதிரைகளும் நிலக்கோட்டையில் இருந்து கொள்ளையடிக்கபட்டு கூளப்ப நாயக்கரின் வலிமை குறைக்கபட்டது.**

**திண்டுக்கல் பாளையக்காரர்கள் ஒன்றாக ஒரு அணியாக இருந்து இருந்தால் அவர்கள் 30000 வீரர்களை கொண்ட படைகளை உருவாக்கி ஹைதர் அலியை ஓட ஓட விரட்டி இருக்கமுடியும்.**

**Aஆனால் இவர்களின் ஒற்றுமையின்மையால் 700 குதிரை வீரர்கள்,1000 காலாட்படை,நான்கு துப்பாக்கி உடன் வந்த ஹைதர் அலி திண்டுக்கலை தனதாக்கினான்.**

**வரி பாக்கியானதால் நிலக்கோட்டை சிந்தம கூளப்ப நாயக்கர் தன்னுடைய திண்டுக்கல் கிரமமான பித்தளை பட்டி,பிள்ளையார் நத்தம் போன்ற ஊர்களை செட்டியிடம் அடகு வைத்து பணத்தை ஸ்ரீரங்க பாட்டடிணத்துக்கு கொடுத்துவிட பணத்தையும் பெற்றுக்கொண்டு இரண்டு கிராமங்களை பிடித்துக்கொள்கிறான் ஹைதர் அலி.**

## 39.சக்கர பணம்

**வெள்ளைக்காரன் கிஸ்தி நிர்ணயித்தாலும் கூட நான்கில் மூன்று பங்கு பாளையங்கள் கிஸ்தியும் கட்டவில்லை அதற்கான வட்டியும் கட்டவில்லை.ஆங்கிலேயரை எதிர்க்கவும் செய்தனர்.ஆங்கிலயரை கண்டால் மூச்சு விட கூட பயப்படும் அந்தக் கால காலத்தில் எதிர்த்து நடப்பது போரிடுவது என்பது அவ்வளவு எளிதல்ல.அவன் ஆட்சிக்கு புதியவன்.இளங்கன்று பயம் அறியாது போல நடந்தான்.பாளையங்கள் எல்லாம் கி.பி 1300ல் தொடங்கி கி.பி1800ல் அழியும் தருவாயில் நவீன போர்க்கருவிகள் இல்லாமல் இருந்தனர்.இதனால் எதிர்த்த போரிட்ட பாளையங்கள் மற்றும் கிஸ்தி கட்டாத பாளையங்கள் எல்லாம் பிடுங்கப்பட்டும் ,கம்பெனி நேரடி ஆட்சியும் அல்லது பக்கத்து பாளையங்களுடன் சேர்க்கபட்டும் வரி வசூல் செய்யப்பட்டன.பிடுங்கபட்ட பாளையைம் எவ்வளவு சக்கரபணம் கொடுத்ததோ அதில் மூன்றில் கால் பங்கு பணம் பாளையங்களின் குடும்ப பராமரிப்பு செலவுக்காக ஒருவர் பெயரில் வரும்.அதை குடும்ப உறுப்பினர்கள் சேர்ந்து முடிவு எடுப்பர் யார் பெயரில் கொடுக்கபட வேண்டும் என்பதை. அந்த நபர் அண்ணன் தம்பிகளுக்கு பிரித்து கொடுத்து தானும் வைத்துக்கொள்ள வேண்டும்.இதற்கு Allowance or பென்சன் என்று பெயர்.கற்றறிந்தவர்கள் கூட இந்த Allowanceஐ வெற்றிலை பாக்கு செலவு என்கின்றனர்..எல்லா பிடுங்கப்பட்ட பாளையங்களுக்கும் ஒரே மாதிரி Allowance கொடுப்பதில்லை..சக்கர பணத்தை பொறுத்து Allowance மாறும்.**

**அன்றைய பாளையர்களின் கிராம நிலங்கள் ,கொடுத்த ஆண்டு விவசாய பணம்.(கி.பி 1790)**

**1)கோம்பை:- நல்ல செழிப்பான விவசாய நிலம் கொண்ட பாளையபட்டு..3000 சக்கர பணம் கொடுக்கும் பாளையபட்டு.**

**பாளையக்காரர் காப்பிலியர்.**

**2)எரசக்க நாயக்கனூர்:-**

**நிலங்கள் அனைத்தும் மோசாக விவசாயம் செய்ய முடியாமல் உள்ளது..500 சக்கர பணம் கொடுக்கிறது .பாளையக்காரர் கம்பள ஜாதி.**

**3) தேவாரம் : நிலங்கள் 1700 சக்கர பணம் கொடுக்க வேண்டியது .போடி நாயக்கருடைய மருமகன் தேவார பாளையக்காரர்.கம்பள ஜாதி.**

**4)போடிநாயக்கனூர்:7000 சக்கர பணம்.திருமலை போடி நாயக்கர் கம்பள ஜாதி.**

**5)கந்தப்பநாயக்கனூர் :சக்கரபணம் 4500**

**6)வடகரை :-6500 சக்கரபணம்.ராமபத்திர நாயக்கர் தெலுங்கு ஜாதி.**

**7)தேவதானப்பட்டி :-3500 சக்கரபணம். நல்லம நாயக்கர் கம்பள ஜாதி.**

**8)தொட்டியம் கோட்டை:-1600 சக்கரபணம் ,நாயக்கர் கம்பள ஜாதி.**

**9)அம்மைய நாயக்கனூர்-11000 சக்கர பணம் .பாளையக்காரர் கதிரி நாயக்கர் கம்பள ஜாதி.**

**10)நிலக்கோட்டை:-9000 சக்கரபணம் பணம். பாளையக்காரர் கூளப்ப நாயக்கர்.**

**11)அம்பாத்துரை:-2000 சக்கர பணம் கொடுத்த விவசாயம் நிலங்கள் கொண்ட பாளையம்.பாளையக்காரர் Mobala நாயக்கர்.கம்பள ஜாதி.**

**12)தவசிமடை:- 65 பகாடா(Pagoda) கிஸ்தி பணம் .Shodala நாயக்கன் கம்பள ஜாதி.**

**13)எமக்கலாபுரம்:- 450 சக்கர பணம் கிஸ்தி .கம்பள ஜாதி.**

**14)மர்னூத்:-550 சக்கரபண கிஸ்தி. சின்ன கதிரி நாயக்கன்.கம்பள ஜாதி**

**15)மடூர் -: நல்ல பாளையம் கம்பெனி நிர்வாகம். சின்ன கதிரி நாயக்கர்.கம்பள ஜாதி.**

**16)சொக்கம்பட்டி:-நல்ல பாளையம் கம்பெனி நிர்வாகம் ,பல்ல முத்து நாயக்கர் கம்பள ஜாதி.**

**17)எரியோடு:-6000சக்கர பணம்.முத்து குமார வேலு வல்ல கொண்டம நாயக்கர்.**

**18)பள்ளியப்ப நாயக்கனூர் :-1000 சக்கர பணம் கிஸ்தி.பள்ளியப்ப நாயக்கர் கம்பள ஜாதி.**

**19)விருப்பாட்சி:-12000 சக்கரபணம்.கோபால நாயக்கர் கம்பள ஜாதி.**

**20)கன்னிவாடி 21000 சக்கர பணம்.அப்பய நாயக்கர் கம்பள ஜாதி.**

**21)இடைய கோட்டை:-2500 சக்கரபணம் கிஸ்தி கம்பள ஜாதி.**

**22)மாம்பாறை :-500 சக்கர பண கிஸ்தி. கம்பள ஜாதி**

**23)பழனி :-16000 சக்கரபணம்..வேலாயுத நாயக்கன் வேடர் (Vedar) ஜாதி**

**24) ஆயக்குடி:- 4000 சக்கர பணம் கிஸ்தி .வேடர்(Vedar) ஜாதி**

**இந்த சக்கரபணம், பாளையங்களின் விவசாய நிலங்கள் கொடுத்தது.**

## 40. நிலக்கோட்டை சமஸ்தான வழக்குள்:-

நிலக்கோட்டை சமஸ்தானம் ஒரு அதிதீத பழக்கம் உடையது. காலம் காலமாக தந்தைக்கு பின் மூத்த மகன் பட்டமேற்று ஆளுவது கிடையாது. மகன்களில் யாராவது ஒருவர் போட்டிகள் வைத்து தேர்ந்தெடுக்கபடுவர்.இதில் பிரச்சனை ஏற்ப்பட்டால் மச்சு பெருமாள் சுவாமி வீட்டில் சீட்டு குலுக்கி போட்டு அதன் மூலம் பட்டடக்காரர் தேர்ந்து எடுக்க படுவார்.காலம் காலமாக இவ்வாற நடந்து வர கி.பி 1900களில் பெண்கொடுத்த அந்நிய ஜமீன் தன் மருமகன் பட்டமேற்க வேண்டும் என்ற நோக்கத்துடன் தந்தைக்கு பின் மூத்த மகன் என்ற நடைமுறையை புகுத்த நினைத்து வழக்கிட்டார்கள்.

வழக்குகள் மதுரை கூடுதல் சார்பு நீதிமன்றத்தில் O.S 61/1921 மற்றும் O.S 62/1921 என்ற இரு வழக்குகளை ஒரு சேர நடத்திய நீதிமன்றம் நிலக்கோட்டை ஜமீனுக்கு இந்து வாரிசுரிமை தான் வரும். தலைவாரிசு(Lineal Primogeniture) உரிமை வராது என தீர்ப்பளித்தது.

மேலும் அரசால் கொடுக்கப்படும் மாலிக்கான அல்லவன்ஸ் பென்சனை பிரித்து கொடுக்க உத்தரவு பிறப்பித்தது.

பின்னர் பெரியவர்கள் இறந்து விட அந்த பெண் கொடுத்த சம்பந்தி வஞ்சகம் கொண்டு மாலிக்கான அல்லவன்ஸ் தன் பேரனுக்கு வர வேண்டும் என்ற நோக்கத்துடன் அழுது புலம்பி மாலிக்கான அல்லன்ஸ் தன் பேரக்குழந்தைக்கு சமாதான உடன்படிக்கையில் பெற்றுத் தந்தார்.

பின்னர் கி.பி 1998ல் மாலிக்கான அல்லவன்ஸ் பெறுவதை சாதகமாக கொண்டு நிலக்கோட்டை கற்கோட்டை காலி இடத்தை வில்லங்க படுத்தினார் ஒரு ஜமீன் வாரிசு.அது திண்டுக்கல் கூடுதல் நீதிமன்றத்தில் O.S 289/1998 ,A.S 51/2015ல் வழக்கு நடந்தது. பழைய வழக்கை O.S 61/1921 ,O.S 62/1921 சுட்டிக்காட்டி மாலிக்காண அல்லவன்ஸ் உனக்கு தகுதிபடி வரவில்லை.அது பிரிவினைக்காக உத்திரவிடப்பட்டு இருக்கிறது.சமான மனுவில் உன் தகப்பன் பெற்றுக்கொள்ள சம்மதம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஆகவே தலைவாரிசு உரிமை நிலக்கோட்டைஜமீனுக்குவராது என தீர்ப்பளித்தது.

## 41. மாலிக்கான அல்லவன்ஸ்:-

**நிலக்கோட்டை பாளையம் ஆங்கிலேயர்களால் கைப்பற்றப்பட்டபோது பாளைய ஜமீன்தார் குடும்ப வாரிசுகள் கஷ்டப்படக்கூடாது என்ற நோக்கத்திற்காக பென்சன் திட்டத்தின் படி பாளைய குடும்பத்திற்கு பென்சன் கொடுக்கபட்டது. மாலிக்கான அல்லவன்ஸ் குடும்பத்தை யார் நிர்வாகம் செய்கிறார்களோ அவர்கள் பெயரில் பதிவு செய்யப்பட்டு அவர்கள் வாங்கி குடும்பத்தில் உள்ளவர்களுக்கு பிரித்து கொடுப்பர்.அவர்கள் வரி வசூல் செய்த பணத்தில் 10% பணமாக கொடுக்கப்படும்.**

**நிலக்கோட்டை பாளைய குடும்பத்திற்கு முதன் கி.பி 1800களில் முதன் முதலில் ஐம்பது ரூபாயும் பின்னர் திருவேங்கட கூளப்ப நாயக்கரின் இரு மகன்களுக்கு கி.பி 1857ல் இருநூற்று முப்பத்தி நான்கு ரூபாயும் வந்தது. பினனர் வருடமாக 2964 கொடுத்தது.மாலிக்கான அல்லவன்ஸ் அன்றைய ஆங்கில கலெக்டர் சம்பளத்திற்கு சமம்.**

### மாலிக்கான அல்லவன்ஸால் வந்த வழக்கு .

**நிலக்கோட்டை அரண்மனையை 1900களில் நிர்வகித்த வாரிசு ஒருவர் மாலிக்கான அல்லவன்ஸ் என் பெயரில் வருகிறது எனக்கே சொந்தம் என வழக்கு பதிவு செய்துவிடுகிறார்.வழக்கை விசாரித்த நீதிமன்றம் மாலிக்கான அல்லவன்ஸ் குடும்பத்தை பராமரிக்க கொடுக்கபடும் தொகை அதை பிரித்து கொடுக்க வேண்டும் என உத்தரவிட்டு வழக்கை முடித்து வைத்தது.பின்னர் வழக்கு போட்டவரும் இறந்து விட அவருடைய இரண்டு வயது குழந்தைக்காக நிலக்கோட்டை அரண்மனை குடும்பங்கள் ஒன்று சேர்ந்து அந்த இரண்டு வயது குழந்தை பெற்றுக்கொள்ள சமாதான மனுவில் சமரசம் செய்து கொண்டனர்.**

### =>மீண்டும் வந்த அதே வழக்கு (1998)

**அந்த இரண்டு வயது குழந்தையின் நலன் கருதி பெரியவர்கள் எடுத்த முடிவு விபரீதமானது.அவருடைய மகன் நான் தான் மாலிக்கான அல்லவன்ஸ் பெறுகிறேன் மற்ற குடும்பங்களை மறைத்து சொத்தை வில்லங்கபடுத்தினார்.இதுவும் வழக்காக பதிவு செய்யப்பட்டு வழக்கு நடந்ததில் மாலிக்கான அல்லவன்ஸ் மூன்று குடும்பங்களுக்கு சொந்தம் என்ற பழைய தீர்ப்பை சுட்டிக்காட்டி சமாதான மனுவின்**

**அடிப்படையில் தான் உன் தந்தைக்கு வந்தது என அடித்து கூறி ஆகவே சொத்தை வில்லங்கபடுத்தியது செல்லாது என தீர்ப்பளித்தது.**

**1900 ஆண்டுகளில் மாலிக்கான அல்லவன்ஸ்(மாதம்)..**

**1.நிலக்கோட்டை-ரூ246**

**2.சுக்காம்பட்டி-ரூ60**

**3.தொட்டியம் கோட்டை-ரூ30**

**4.சந்தையூர்(கோப்பைய நாயக்கனூர்)-ரூ60**

**5.பல்லியப்ப நாயக்கனூர்-ரூ50**

**6.மடூர்-ரூ60**

**மாலிக்கான அல்லவன்ஸ் என்பது பாளையம்தார் குடும்ப பராமறிப்பிற்காக கொடுக்கப்படும்தொகை(Not for single Heir but for family).பாளையம் வெள்ளைக்காரனால் எடுபட்டு போன போது அந்த பாளையத்தில் உள்ள விவசாய வருமானத்தில் 10% குடும்ப பென்சனாக கொடுக்கபட்டது**

**ஊரில் உலவும் கதை பென்சனை பற்றி:**

**வெள்ளைக்காரன்:உங்க நிலத்தை எல்லாம் எடுத்துக்கொண்டோம் உங்களுக்கு ஏதாவது செய்ய வேண்டுமே?..**

**பாளையம்தார்:-நீ எவ்வளவு கொடுப்பாய்?**

**வெள்ளைக்காரன்:10%**

**பாளையம்தார்:-நீயே வைத்துக்கொள் எங்களுக்கு எப்படி பிழைக்க வேண்டும் என தெரியும்.**

**வெள்ளைக்காரன்: ஏதாவது செய்ய வேண்டுமே ?**

**பாளையம்தார்:நான் அதை வெற்றிலை பாக்கு வாங்க பயன்படுத்தி கொள்கிறேன்.**

## 42.திண்டுக்கல் சீமை

**மதுரைச் சீமையின் வடக்குப்பகுதி, திண்டுக்கல் சீமை என வழங்கப்பட்டது. திண்டுக்கல் மலைமீது வலிமை மிக்க அரணை அமைத்து இராணுவச்சிறப்பு மிக்ககாகச் செய்தனர் மதுரை நாயக்க மன்னர்கள், அவர்களது ஆட்சிக்குப் பின்னர் கி பி. 1745 முதல் இந்தப் பகுதி முழுவதும் ஸ்ரீரங்கப்பட்டிணத்தை தலைநக ராகக் கொண்டு ஆட்சி செய்த மைசூர் மன்னருக்கு கட்டுப்பட்டு இருந்தது. குறிப்பாக மைசூர் மன்னரான ஹைதர் அலியும் அவரை அடுத்து அரியணை ஏறிய திப்புசுல்தானும் திண்டுக்கல் சீமையின் நிர்வாகத்தில் மிகுந்த அக்கரை கொண்டு திண்டுக்கல் கோட்டையைச் சிறந்த ராணுவ தளமாக மாற்றினர்.**

**இதே கோட்டையில் பிரெஞ்சுக்காரர் உதவியுடன் ஆயுதக்கிடங்கு ஒன்றை அமைத்தனர். (கி.பி. 1756) இந்தப்பகுதிக்கு ஆளுநராக ஹைதர் அலிகான் தமது மைத்துனர் சையது சாயபுவை நியமனம் செய்து இருந்தார். மத்தூர், வடகரை, அம்மைநாயக்கனூர், இடையன் கோட்டை, கோம்பை, நிலக்கோட்டை, மாம்பாறை, பழனி, சந்தையூர், எரியோடு ஆகியவை. இந்தப் பகுதியைச் சேர்ந்த முக்கியமான பாளையங்களாகும்.மைசூர் மன்னர் திப்புசுல்தான் கி.பி. 1792ல் ஆங்கிலேருடன் ஏற்படுத்திக் கொண்ட மங்களூர் உடன்படிக்கையின்படி,இந்தச்சீமை ஆங்கிலேயர்களது சொத்தாக மாறியது. இந்தப் பகுதியை அடுத்துள்ள கம்பம் பள்ளத்தாக்கில் ஏற்கனவே கி.பி. 1787ல் ஆற்காட்டு நவாப்பினால் ஆங்கிலேயருக்கு வரிவசூல் உரிமை கொடுக்கப்பட்டு இருந்தது.அதனால் முதன்முறையாக ஆங்கிலக் கலெக்டர்கள் நியமனம் செய்யப்பட்டனர். ஆனால் அவர்களால் அந்தப்பகுதி நிர்வாகத்தை இயக்க முடியவில்லை.முதலில் ஜியார்ஜ் பிராக்டர் என்பவரும், பின்னர் இர்வின் என்ப வரும், கலெக்டர் பதவி ஏற்றுப் பயன் இல்லாததால், கர்னல் புல்லர்டர்ன் பொறுப்பில், இராணுவ அணியொன்று சென்னையில் இருந்து திண்டுக்கல்லுக்கு அனுப்பி வைக்கப்பட்டது.அந்த தளபதியின் அறிக்கை அப்பொழுது அங்கு நிலவிய குழப்பமான சூழ்நிலையைச் சித்தரிப்பதாக உள்ளது.**

**ஒரு நூறாயிரம் பாளையக்காரர்களும், கள்ளர்களும், தெற்குப்பிராந்தியம் முழுவதும் ஆயுதம் தாங்கியவர்களாக உள்ள - அரசுக்கு எதிராகவும், தங்களை தண்டனையில் இருந்து தப்பித்து கொள்வதற்காகவும் அவர்கள் குழப்பத்தை எதிர் நோக்கி காத்து இருக்கின்றனர்.இவர்களது கிளர்ச்சிகளை ஒடுக்குவதற்குள், நமது கருவூலப் பணம்**

**முழுவதும் காலியாகி விடும். சீமையில் மக்களது நடமாட்டம் இல்லை. நமக்கு வர வேண்டிய வருமானத்தை எதிரிகள் வசூலித்து வருகின்றனர். நமது அணிகளில் கட்டுப்பாடு இல்லை. அவர்களுக்கு சரியான முறையில் ஊதியம் வழங்கப்படவில்லை. அவர்களை இயக்க கின்ற தலைமையும் சரியாக இல்லை.**

திண்டுக்கல் மண்டலம்கி.பி 1790 ஆங்கிலேயர் வசம் சென்ற போது ஆங்கிலேயேருக்கு சிம்ம சொப்பனமாக இருந்த திண்டுக்கல் மண்டல பாளையக்காரர்கள்

1)சந்தையூர்-கோப்பைய நாயக்கர்.

2)மணப்பாறை-லக்கைய நாயக்கர்.

3)பழநி-வேலாயுத நாயக்கர்.

4)விருப்பாட்சி-கோபால நாயக்கர்

6)தேவதானப்பட்டி-பூசாரி நாயக்கர்.

7)நிலக்கோட்டை-கூளப்ப நாயக்கர்

8)போடி நாயக்கனூர்-நாயக்கர்

9)சாப்டூர்-காமய நாயக்கர்

இந்த கோப்பைய நாயக்கர் யார் வந்து வரி வந்து கேட்டாலும் தன் குல தெய்வம் காமாட்சியம்மனை கேட்பார்.தர வேண்டாம் என்று அம்மன் வாக்கு வந்தால் எவன் வந்தாலும் தரமாட்டார்.வெள்ளையன் மேனேஜர் போட்டாலும் மக்கள் மேனேஜருக்கு வரித்தாராமல் இவரே வசூல் செய்வார்.பழநி-வேலாயுத நாயக்கர் அனைத்து பாளையங்களும் ஒரு காலகாட்டத்தில் வெள்ளையன் ஆட்சிக்கு அரை குறையாக ஏற்றாலும் நேருக்கு நேர் சொல்வார் நான் வெள்ளையனுக்கு கீழ்படிய முடியாது என்று

**.................................... எங்கும் குழப்பம் ....................................................**

**"இந்தப் பகுதிக்கு புதிய எஜமானர்களாக வந்த கும்பெனிக் கலெக்டர்களை இந்தப் பாளையக்காரர்கள் மதிக்கவில்லை." அவர்களைக் கும்பெனி நிர்வாகம் அங்கீகரித்து வழங்கியசன்னதுகளைப் (சான்றிதழ்களை) பெற்றுக் கொள்வதற்கும் அவர்கள் மறுத்துளிட் டனர். இந்தச் சூழ்நிலையில் அவர்களிடம் கிஸ்திப்பணத்தை வசூலிக்க முடியாமல் தவித்த கும்பனியரும் அவர்களது முகவர்களான குத்தகைதாரர்களும் குடிமக்களைக் கசக்கிப் பிழிந்தனர். இவர்களுக்கு எல்லாம் மேலாக, அவர்களது எடுபிடிகளான கணக்குப்பிள்ளைகளும், வில்லைச் சேவகர்களும் மக்களை அல்லல்படுத்துவதையே தங்களது அன்றாடப் பணியாகக் கொண்டு இருந்தனர். இவ்வளவு கொடுமைகளுக்குப் பின்னரும், கும்பெனியார் நிர்ணயித்த கிஸ்திப் பணம் அவர்களுக்குப் போய்ச் சேரவில்லைஇடையிலே பல ஊழல்கள். குடிமக்களும்,**

**பாளையக்காரர்களும் இந்த கோர நாடகத்தில் பாதிக்கப்பட்டவர்களாக காட்சியளித்ததைத் தளபதி புல்லர்ட்டனின் அந்த அறிக்கை தெளிவாகச் சுட்டுகிறது.**

**இவைகளை அறிந்த கும்பெனி தலைமை, கலெக்டர்களை மாற்றினர். ஓரளவு குடிமக்களுக்கு இனந்தெரிந்தவர்களைத் தங் களது குத்தகைதாரர்களாக நியமனம் செய்தனர். இவைகளினால் நிலைமையில் மாற்றத்தை ஏற்படுத்த இயலவில்லை,இத்தல குழம்பிய நிலையைப் பொதுவாகக் கள்ளர்களும், குறிப்பாக சில பாளையக்காரர்களும் தங்களது சுயநலத்திற்காகப் பயன்படுத் தினர். **இனாம்"" **சுவந்திரம்'* ஆகியவை சம்பந்தப்பட்ட வசூல் தொகை கணக்கிற்குக் கொண்டு வரப்படாமல் கையாடல் செய்யப் பட்டது. கும்பெனியாரது பணியாளர்களான அமில்தார்களும், கணக்கப்பிள்ளைகளும், ஒன்று சேர்ந்து கொண்டு பொய்க்கணக்கு தயாரித்துப் பெரும்பாலான நிலத்தை வரிவிதிப்பில் இருந்து விலக்கு. செய்து அவைகளின் வருமானத்தைக் கையாடல் செய்தனர்.**

**பழனி பாளையக்காரர், தமது பாதுகாப்புக்கென ஆயிரம் பேர் கொண்ட படையணி ஒன்றைத் துவக்கினார். தேவதானப்பட்டி பாளையக்காரர் கும்பெனியாருக்குக் கிஸ்தி செலுத்துவதற்கான உடன்பாட்டில் கைச்சாத்திட மறுத்தார். விருபாட்சி பாளையக் காரர் கலெக்டர் வழங்கிய சன்னதைப் பெற்றுக் கொள்ளவில்லை.**

**போடி பாளையக்காரரது பணியாட்கள், அந்தப் பாளையத்தில் கலெக்டரது முகாமில் இருந்த வில்லைச் சேவர்களைச் சுட்டனர். இந்த நிகழ்ச்சிக்கு வடகரை பாளையக்காரரும் உடந்தையாஇருந்தார். கோம்பை பாளையக்காரர் கம்பம் பள்ளத்தாக்கில் குழப்பத்தை உருவாக்கி வந்தார். இது கி.பி. 1794ல் மதுரை, திண்டுக்கல் சீமைகளின் பாளையங்களின் நிலை." இவைகளைக் கண்டு பீதி கொண்ட கும்பெனி நிர்வாகம், பாளையக்காரர்களை ஆயுதம் சேகரிக்கக்கூடாது என பயமுறுத்தியது. கேப்டன் ஆலிவர் தலை மையில் ஒரு சிறு பட்டாளத்தை பழனிக்கும் திண்டுக்கல்லுக்கும் அனுப்பிவைத்து பாளையக்காரர்களை பயமுறுத்திப் பார்த்தது. திண்டுக்கல் பாளையக்காரர்களின் கிளர்ச்சித் திட்டம் தீவிர மடைந்தது. கிளர்ச்சிக்காரர்களின் தலைவர் லோகையா நாயக்கர் .பழனி பாளையக்காரராக வையாபுரி நாயக்கரை நியமனம் செய்ய ஏற்பாடு செய்தார். ஏனெனில் பழனி பாளையக்காரராக இருந்த வரைப் பிடித்து பரங்கிகள் பாலசமுத்திரம் சிறையில் அடைத்து விட்டனர்.**

**இங்கனம் பரங்கிகளுக்கு எதிராக பகிரங்கமாக செயல் படுவதன் மூலம் ஏனைய பாளையக்காரர்களிடம் தன்னம்பிக் கையை ஏற்படுத்தி கும்பெனியாருக்கு எதிரான அணியைப் பலப் படுத்துவது என்பது அவரது குறிக்கோள். பழனி பாளையக் காரரது முன்னாள் பிரதானி முத்து சேர்வைக்காரர் லோகையா நாயக்கருக்கு பக்கபலமாக விளங்கினார். விருபாட்சி பாளையக் காரரும் இந்த அணியில் சேர்ந்து இருந்தார். இடையக்கோட்டை போன்ற கும்பெனியாரின் ஆதரவு பாளையங்களைத்தாக்கி அழிக்க அவர்கள் திட்டம் தீட்டினர்திண்டுக்கல் சீமையின் வடக்கோடியை ஒட்டி அமைந்து இருந்த மணப்பாறை, அரவக்குறிச்சி பாளையக்காரர்களும் கிளர்ச்சிக்கு ஆதரவாக இருந்தனர்.* இவர் கள் அனைவருக்கும் முழு ஆதரவு வழங்கி வந்தவர் கன்னிவாடி பாளையக்காரர். மணப்பாறை, கன்னிவாடி பாளையக்காரர்கள் கும்பெனிக்கலெக்டர் உத்திரவை புறக்கணித்தனர். விசாரணைக்கு ஆஜராகுமாறு அனுப்பிய **சம்மன்" அழைப்பையும் நிராகரித்ததனர். மணப்பாறை பாளையக்காரரது நடவடிக்கைகளை இரகசியமாகக் கண்காணித்து வருமாறு இராமநாதபுரம் கலெக்டருக்கு கும்பெனியார் உத்திரவு அனுப்பினர்.**





மகாராஜா கூளப்ப நாயகர்

## 43. *ஆங்கிலேயருடன் போர்*

**ஆங்கில அரசிடம் திண்டுக்கல் வந்தவுடன் மாவட்ட ஆட்சியை நிறுவ நினைத்தது.இந்தியா முழுவதும் மாவட்ட ஆட்சியை எளிதாக நிறைவேற்ற முடிந்த ஆங்கில அரசுக்கு மதுரை திண்டுக்கல் மாவட்ட ஆட்சி முறை தோல்வியிலயே முடிந்தன.திண்டுக்கல் பாளையக்காரர்களின் ஆங்கிலேயருக்கு எதிரான போர் தீரத்துடன் உள்ளுரம் கொண்டதாக இருந்தது. டெக்கான் முஸ்லீம் ஆட்சியாளர்களிடம்,மராத்தியர்களுடனுடன்,மைசூர் சுல்த்தான்களிடமும் மற்றும் வீரத்திற்கு பெயர் போன முரட்டு துருக்கியர்களுடன் போரிட்டு வந்த திண்டுக்கல் தொட்டிய கம்பள பாளையக்காரர்கள் ஆங்கிலேயே அடக்கு முறைக்கு அடிபணியவில்லை.உயிர்துடிப்புள்ள பாளையக்காரர்கள் மிகுந்த ஆற்றுலுடன் செயல்பட்டனர் என்பதை மாவட்ட கலெக்டர்கள் கிழக்கிந்திய கம்பெனிக்கு எழுதிய கடிதங்கள் மூலம் அறியலாம்.**

**இறுதியாக ஜமீன்தார் முறை அறிமுகபடுதப்பட்டது. திண்டுக்கலிலல் இருந்த இருப்பத்தியாறு பாளையங்களில் பதிமூன்று பாளையங்கள் தான் ஜமீன்தார்களாக பொறுப்பேற்றனர்.மீதம் இருந்த பாளையக்காரர்களுக்கு ஓய்வூதியம் கொடுத்தும்,சிறையில் அடைத்தும்,தூக்கில் போட்டும், மன நிம்மதி அடைந்தது ஆங்கில அரசு.**

கட்டுக்கடங்காத வீரம்! வீரத்தோடு விவேகம் நிலக்கோட்டை பாளைய மகாராஜா கூளப்ப நாயக்கர்!

நிலக்கோட்டை மிகவும் வலுவான கோட்டை கொண்ட திண்டுக்கல் சீமையில் உள்ள 26 பாளையங்களுள் ஒன்று.ஆர்டீசு என்ற கலெக்டர் கப்பம் கட்ட சொல்கிறார்.நிலக்கோட்டையில் கடும் வறட்சி கட்ட முடியாது என எழுதி அனுப்புகிறார்.நேரடியாக ஆங்கில அதிகாரியை அனுப்பி மக்களிடம் வரி வசூல் செய்ய அனுப்புகிறார்.அவர்கள் மக்களை துன்புறத்தினர்.ஆடு மாடுகள் எல்லாம் வறட்சியால் இறந்து போய் கஷ்டத்தில் இருந்த மக்களுக்கு இந்த ஆங்கிலேயர் தொல்லை தாங்க முடியவில்லை.

சட்டைக்காரன் மேடு

ஆங்கில அதிகாரி வரி வசூல் செய்ய எப்பொழுதும் போல் வந்தான். முசுவனூத்து அருகே ஒரு மேட்டிற்கு கீழே கூளப்ப நாயக்கரும் சில பிரதானிகளும் அவனை கொல்ல காத்து இருந்தனர் அந்த கொடுமைக்கார ஆங்கிலேயன் சுற்றி வளைக்கபட்டு கொல்லபட்டான். அவன் குதிரையில் இருந்து தவறி விழுந்து இறந்ததாக கலெக்டருக்கு சொல்லி அனுப்பினர்.

அந்த மேட்டிற்கு இன்றளவும் சட்டைக்காரன் மேடு என்று பெயர்.அங்கு ஒரு நடுகல்லும் வெள்ளைக்காரனுக்கு சமாதியும் இன்றும் உண்டு.

ஆனால் உண்மையை ரொம்ப நாள் மூடி வைக்க முடியாது என்பது என்பது பழமொழி..ஆனால் கூளப்ப நாயக்கரிடம் இருந்த நம்பிக்கை துரோகி சில நாட்களிலே ஆங்கிலேயைனிடம் போட்டுக் கொடுத்தான்.வெள்ளைக்காரனும் விசாரணை மேற் கொண்டு நிலக்கோட்டை மீது போர் தொடுத்தான்.

*போரின் போக்கு*

ஆஜானுபாகுவான தோற்றம்! மீசையை தடவியபடி உட்கார்ந்து இருந்தார் இருபத்தி இரண்டே வயதான மன்னர் கூளப்ப நாயக்கர்.மழை இல்லைவிளைச்சல் இல்லை .நிலக்கோட்டை சமஸ்தானத்தில் இருந்த 108 கிராமத்திலும் இதே நிலை.ஒன்பதாயிரம் சக்கர பணம் கட்டவேண்டும் என மிரட்டல் விட்டான் ஆர்டீசு துரைஒன்றும் பெரிதல்ல மக்களை கசக்கி பிழிந்தால் வரியை கட்டிவிடலாம்.ஆனால் கூளப்ப நாயக்கர் நிலக்கோட்டையை உருவாக்கியதிலிருந்து மக்கள் எவ்வளவு கொடுக்கிறார்ளோ அது தான் வரி.அவ்வோறே ஆணையிட்டு இருந்தார்.என்ன நடந்தாலும் சரி மழை பெய்யாமல் விவசாயம் இன்றி இருக்கும் மக்களுக்கு சுமை கொடுக்க கூடாது என்று திடமாக இருந்தார்.

வரிகட்ட முடியாது என்று ஓலை அனுப்பிவிட்டார்..ஆங்கில அதிகாரிகளே நிலக்கோட்டைக்கு வந்து 108 கிராம மக்களிடம் வரி கேட்டு தொந்தரவு செய்தனர்.தகவல் அறிந்த கூளப்ப நாயக்கர் சில சேர்வைகாரர்களின் 89 உதவியுடன் முசுவனூத்து அருகே குதிரையில் வந்த வெள்ளைக்காரனை கொலை செய்தார்.குதிரையில் இருந்து விழுந்ததாக தகவல் அனுப்பபட்டது. நிலக்கோட்டை

பெஞ்சைவல்ல கூளப்ப நாயக்கர் இளைஞன் மட்டும் அல்ல முரடனும் கூட..வரியும் கட்டவவில்லை.

கலெக்டரிடம் வந்த கடிதங்களுக்கு முறையான பதிலும் இல்லை. ஆயுதங்களையும் ஒப்படைக்கவில்லை .கோட்டையும் இடிக்கவில்லை.இடிக்க கூடிய கோட்டையா அது விறலிவிடு தூது கேட்ட நாகம கூளப்ப நாயக்கன் போட்ட இரட்டை கல் மதில்கள் கொண்ட 26 ஏக்கர் பரப்பு கொண்ட கோட்டை.

அடுத்த நாளே நிலக்கோட்டை அரண்மனையில் சலசலப்பு.கூளப்ப நாயக்கர் கைது செய்ய பீரங்கியோடு படை வருவதாக.

மனைவி மக்களை போடினாயக்கனூருக்கும் உறவினர்களை கன்னிவாடி பாளையத்துக்கும் அனுப்பிவிட்டு ஆனைமலைக்கு சென்றார்.அங்கு 10000 ஆனையூர் கள்ளன்களை தயார் செய்து போருக்கு தயாரானார்..இந்த ஆனையூர்கள்ளன்கள் தாக்குதல் விசேசமானவை..கோட்டைக்குள் எப்படி மறைந்து தாக்குவது என்று முடிவு செய்யபட்டது.இந்த மறைந்து தாக்குதலுக்கு பெயர் கொரில்லா தாக்குதல் ஆகும்.

கோட்டைக்குள் இருந்த சில வெள்ளையர்களை விரட்டி அடித்துவிட்டு போர் நடந்தது..வளரி துப்பாக்கிகள் கொண்டு வெள்ளைக்காரன்களை தாக்கினர்..வெள்ளைக்காரன்கள் பின்வாங்கினர்.பின்னர் சில நாட்களில் கலெக்டரோடு பீரங்கி வந்தது..தாக்குதல் பயங்கரமாக இருந்தது.

இரு தரப்பிலும் சேதங்கள் அதிகம்.ஆங்கிலேயரின் பலம் ஓங்கி வெற்றி பெற்றனர்.நாயக்கரரை பிடிக்க முடியவில்லை.கள்ளர்கள் பாதுகாப்பாக அழைத்து சென்றனர்.வெள்ளைக்காரன்கள் ஊர் ஊராக தண்டோரா போட்டனர்.கூளப்ப நாயக்கர் பிடித்தோ அல்லது தலையையோ கொண்டு வந்தால் 1000வராகன் பொண்ணும் மனைவி பிள்ளைகளை பிடித்து கொடுத்தால் 500 வராகன் பொன்னும் அறிவிக்கபட்டது.

மூன்று வருடமாக(1798-1801) வரை பிடிக்க முடியவில்லை..கூளப்ப நாயக்கர் மலைகளில் கிராம மக்கள் உதவி கொண்டு ஆயுத தொழிற்சாலை உருவாக்கி போர்க்கருவிகள் செய்து கொண்டிருந்தார்.இதற்கிடையில் எவனோ ஒருவன் 500 வராகன் பொன்னுக்கு ஆசைபட்டுடான் போலும்..கலெக்டர் போடி நாயக்கனூர் சென்று மனைவி மக்களை பெரும் போராட்டுத்துக்கு பின் கைது செய்தனர்.சில்லவார் கோத்திரமான கூளப்ப நாயக்கரின் பாரி கலெக்டரின் தலையை வெட்டி துண்டாக்கி இருப்பாள்.

கூளப்ப நாயக்கரிடம் இந்த விசயம்சென்றது..தன்னை தூக்கிலிட்டாலும் பராவயில்லை மனைவி மக்களை விடுவிக்க வேண்டும் என்று நேராக கலெக்டரிடம் சென்றார் கூளப்ப நாயக்கர்..கூளப்பநாயக்கரை சிறையில் அடைத்து விசாரிக்க வேண்டும் என்றது.

குதிரைக்கு கொள் வைக்கும் வேலை கூளப்ப நாயக்கருக்கு கொடுக்கபட்டது..சிறையில் இருந்த அதிகாரி மகாராஜா நீங்கள் தப்பி போய்விடுங்கள் உங்களை தூக்கில் போட்டுவிடுவார்கள் என்றார்எங்கள் முன்னோர்கள் உங்கள் அரண்மனையில் வாழ்ந்தவர்கள் என்றார்..சிறை அதிகாரி ஆலோசனைப்படி சிறையில் இருந்து தப்பிய கூளப்ப நாயக்கரை வெள்ளையன்கள் துரத்தினார்.இறுதியாக கலை கூத்தாடி கூட்டுத்துக்குள் நுழைந்துவிட்டார்..ஆட்டம் பாட்டம் முடிந்ததும் கலை கூத்தாடிகள் தட்டு ஏந்த கூளப்ப நாயக்கரும் தட்டேந்திவிட்டார்..அதற்குள் கலெக்டரும் வந்துவிட்டான் அங்கு.

கூட்டலிருந்த சிலுக்குவார்பட்டி கணக்குபிள்ளை கண்டுபிடித்து மகாராசா நீங்களா???என்ன கோலம் இது என்று தன்னை மறந்து கத்திவிட்டார்.ஆங்கில அதிகாரிகள் கூளப்ப நாயக்கரை சுற்றிவிட்டனர்..மக்கள் அவர்களை சுற்றிவிட்டனர். வரிகட்டாதற்கு நாங்கள் தான் காரணம் எங்களை பிடிச்சுகோங்கோ எங்க மகாராசாவ விட்டுங்க.இதுவே 81 கிராமங்களின் மன ஓட்டம்.

இறுதியாக ஆயுதங்களை அனைத்தும் ஒப்படைத்தால் கூளப்பநாயக்கர் மற்றும் மனைவி மக்களை விடுவதாக சொன்னார்கள்.ஆயுதங்களை ஒப்படைத்துவிட்டு ஒருபிள்ளையை மார்பிலும் இன்னொரு பிள்ளையை கைபிடித்து நடத்தியும் நிலக்கோட்டைக்கு மதுரையில் இருந்து நிலக்கோட்டை வந்தார்.

பிரிட்டிஸ் கலெக்டர் கம்பெனி மன்றத்துக்கு எழுதிய கடித நாள்

**17.06.1796**

**ஆங்கிலேயர் சன்னது கொடுத்து முச்சலிகாவில் கூளப்ப நாயக்கர் கையெழுத்து இட வற்புறுத்தபடுகிறார்.பிள்ளையார் நத்தம்,பித்தளைப்பட்டி,புதுப்பட்டி,ஆலமரத்துபட்டி மற்றும் பல தன்னுடைய கிராமங்களை மீண்டும் ஒப்படைப்பதாக இருந்தால் கையெழுத்திட்டு சன்னது பெற்று ஜமீன் பொறுப்பை ஏற்கிறேன்.இல்லை என்றால் முடியவே முடியாது என்று தன் வக்கீல் மூலம் அறிவித்த தினம்.இந்த தாவா முடிவதற்குள் மீதமுள்ள கிராமங்களுக்கு வரி கட்டு வந்த வெள்ளையனோடு போரிட வேண்டிய அவசியமாகிவிட்டது நிலக்கோட்டை கூளப்ப நாயக்கருக்கு.**

பிரிட்டிஸ் கலெக்டர் கம்பெனி மன்றத்துக்கு எழுதிய கடித நாள்

**22.11.1796**

**வெள்ளையன் எதிர்த்து சண்டையிட்டு தோல்வி அடைந்த கூளப்ப நாயக்கர்(கொல்லப்ப நாயக்கர்) மற்றும் அவர் முதன்மை பிரதானி தொட்டப்ப நாயக்கனூர் பாளைத்திற்கு தப்பி சென்றதாகவும் அவர்களை பிடித்து தர கலெக்டர் கேட்ட நாள்.**

பிரிட்டிஸ் கலெக்டர் கம்பெனி மன்றத்துக்கு எழுதிய கடித நாள்

**29.11.1796**

**கூளப்ப நாயக்கர் கச்சைக்கட்டி மலைப்பகுதியில் ஆயுத தொழிற்சாலை உருவாக்கி ஆயுதங்கள் தயாரிப்பதாகவும் ராம்நாடு கலெக்டர் திண்டுக்கல் கலெக்டரிடம் தெரிவித்த தினம்.**

பிரிட்டிஸ் கலெக்டர் கம்பெனி மன்றத்துக்கு எழுதிய கடித நாள்

**26-7-1796.**

**ஆத்தூரில் கொள்ளை போவதாக பொது மக்களிடமிருந்து புகார்.**

பிரிட்டிஸ் கலெக்டர் கம்பெனி மன்றத்துக்கு எழுதிய கடித நாள்

**30-7-1798**

**ஆத்தூரில் காவல் அதிகாரிகளை நியமித்து பாதுகாப்பது நிலக்கோட்டை கூளப்ப நாயக்கர் பொறுப்பு என்பதால் மக்கள் புகார்களுக்கு கூளப்ப நாயக்கரை நடவடிக்கை எடுக்க வலியுறுத்தல்**

**கூளப்ப நாயக்கர் ஆங்கிலேயருக்கு எதிராக பயன்படுத்திய முக்கிய ஆயுதங்கள்:-**

**1)Jingalls Gun-சுவர் துப்பாக்கி:-**

**16 முதல் 18 ஆம் நூற்றாண்டுகளில் எதிரி துருப்புக்களின் முன்னேற்றத்தை உடைக்கப் படைகளைப் பாதுகாப்பதன் மூலம் பயன்படுத்தப்பட்ட ஒரு வகையான துப்பாக்கி ஆகும்.கை பீரங்கி என கூட சொல்லலாம்**

**2)Matchlocks-Fire Gun:- தீயால் பற்ற வைக்கப்படும் துப்பாக்கி:-**

**இந்த துப்பாக்கி பற்ற வைக்கப்படும் அமைப்பைக் கொண்டது.இது ஒரு பழமையான துப்பாக்கி வகையை சார்ந்தது.நாயக்கர்கள் போர்த்துக்கீசியர்களுக்கு கடல் வழியை திறந்து விட்டதால் இவ்வகையான துப்பாக்கி நாயக்கர் கால பயன்பாட்டில் இருந்தன.(வேகிளி கம்பள சில்லவார்களின் தலைவர் தும்பச்சி நாயக்கர் வங்க கடலின் ராஜா என்ற பட்டத்தை பெற்று இருந்தார் .மதுரையை எதிர்த்து கிளர்ச்சி செய்யமால் விட்டு இருந்து இருந்தால் தென் கடலோர மாவட்டங்கள் இவரின் கீழ் இருந்து இருக்கும்).**

**3)Spear:- .குத்தீட்டி வேல்கம்பு**

**தொட்டிய கம்பள வல்லக்கவார்களின் புராதீன ஆயுதம்.**

**கூளப்ப நாயக்கர் காதல், விறலிவிடு தூதுவில் இவ்வாயுதத்தின் பெருமை பேசப்பட்டிருக்கும்.**

**4)bludgeon :- .குண்டாந்தடி**

**இந்த ஆயுதத்தை புராண காலங்களில் பீமன் கையிலிருந்த இருந்த கதாயுதம் கதைக்கு ஒப்பிடலாம்.**

**5)cudgel-மரத்தடி or வளறி தண் மரத்தால் ஆனது. குதிரையின் கால்களை அடித்தால் குதிரை சாய்ந்து விழுந்துவிடும்.**

**இதுவும் ஒரு பழங்கால கருவியாகும்.இந்த ஆயுதங்களுடன் சுமார் எட்டாயிரம்-பத்தாயிரம் கள்ளர்களுடன் கூளப்ப நாயக்கர் போர் செய்து இருக்கிறார்.**

**இதில் தோல்வி அடைந்த கூளப்ப நாயக்கரை கொலை செய்து தலை கொண்டு வந்தால் ஆயிரம் பொன் கொடுப்பதாக ஊர் ஊராக தண்டாரம் போட்டு விளம்பரம் பண்ணிணார்கள்.பொண்டாட்டி பிள்ளைகளை பிடித்து தந்தால் 500 பொன்.கூளப்ப நாயக்கரின் கிராமமான பஞ்ம்பட்டி சேர்வைக்காரர் ரகசிய அறிக்கை:-**

**இவ்வாறு விளம்பரம் பண்ணி இருக்கிறது.இந்தியா முழுவதும் வெள்ளைக்காரன் ராஜ்ஜியமா போச்சு .உன் பொண்டாட்டி பிள்ளையை காசுக்கு ஆசைப்பட்டு பிடித்து கொடுத்துவிட்டார்கள் உன் தலையை எப்படியாவது வெட்டி கொண்டு போய் பரிசு வாங்கிவிடுவார்கள்.போய் பிழைக்கிற வழியை பார் என்று சொல்லி மறைவார்.**

